"அவர்கள் மேட்சிங் பிளவுஸ்
என்று கேட்டாலே, நான்
வீணா பிளவுஸை
தான் காட்டுவேன்"



சிறப்பு மிக்க
பாரம்பரியத்தின்
கவர்ச்சி

# வீணா

பிளவுஸ் துணிகள்



வீணா டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்
(SSM குரூப் நிறுவனம்)

MAC - 1305

# கல்கி

3.11.91
தீபாவளிச் சிறப்பிதழில்

வாஸந்தி எழுதும் தொடர்கதை

# காதலெனும் வானவில்

ஆரம்பமாகிறது



# "பிள்ளையார் அருளாலும் புரட்சித் தலைவி ஆசியாலும்..."

**- அமைச்சர் கண்ணப்பன் பேட்டி**

**பொ**துப்பணித்துறை மற்றும் மின்சார இலாகா மந்திரியான எஸ். கண்ணப்பனுக்கு அதிகாலை நான்கு மணிக்கு ஒரு டெலிபோன் வருகிறது. ''எங்கள் ஏரியாவில் கடந்த சில நாட்களாக மின்சாரம் அடிக்கடி சதி செய்கிறது. இப்போது கூட கடந்த இரண்டு மணி நேரமாக கரண்ட் இல்லை'' என்று பேசுபவர் சொல்கிறார். 'விடியட்டும் பார்த்துக் கொள்ளலாம்' என்றிராமல், உடனே சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டு, போன் செய்த நபரின் ஏரியாவுக்கு மின் சப்ளை பெற்றுத் தருகிறார் மந்திரி. மந்திரிக்கு போன் செய்து குறையைச் சொன்னவர் திருமதி ஒய்.ஜி. பார்த்தசாரதி.

இந்தச் சம்பவத்தை நம்மிடம் சொன்ன மந்திரியின் உதவியாளர், ''மக்கள் எந்த நேரத்தில் குறைகளை எடுத்துக் கொண்டு வந்தாலும், ஆவன செய்வதற்குத் தயாராக இருக்கிறார் அமைச்சர். குக்கிராமத்திலிருந்து போஸ்ட் கார்ட்டில் 'விவசாயத்துக்கு மின் சப்ளை சரியாக வருவதில்லை' என்று கடிதம் வந்தால், 'என்ன, எப்படி' என்று விசாரித்து அந்த விவசாயிக்குப் பதில் எழுதுவார். டூர் போய் விட்டு வந்தால், நாங்கள் குறிப்புகளைப் பார்த்து வரிசைப்படுத்தி மக்களின் பிரச்னைகளைச் சொல்லும் முன்னரே அவரே எடுத்துச் சொல்லி, சம்பந்தப்பட்ட நபர்களைத் தொடர்பு கொள்ளச் சொல்வார்.''

**ம**ந்திரிக்குச் சொந்த ஊர் அதப்படக்கி என்னும் குக்கிராமம். சிவகங்கையிலிருந்து இளையான்குடி செல்லும் சாலையில் இருக்கிறது இந்தக் கிராமம். ''நாங்க எளிய விவசாயக் குடும்பம். எங்கள் பக்கத்தில் விவசாயம் என்பது மழையை நம்பித்தான்'' என்கிறார் மந்திரி.

பள்ளி, கல்லூரி படிப்பையெல்லாம் சிவகங்கை வட்டாரத்திலேயே முடித்துக் கொண்டு, சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்தார் கண்ணப்பன். அது 1972 ம் ஆண்டு.

''நான் தி.மு.க. அனுதாபியாக இருந்தாலும், எம்.ஜி.ஆர். பக்தன். அதனால் தலைவர் தனிக்கட்சி ஆரம்பித்தவுடன் அதில் சேர்ந்து விட்டேன். நானும் நண்பர்களும், சட்டக் கல்லூரி ஹாஸ்டல் தினத்துக்கு தலைவரைக் கூப்பிடுவதாக இருந்தோம். ஆனால் கருணாநிதி அரசு தடை போட்டது. அதனால், கல்லூரி முதல்வரை 'கெரோ' செய்தோம். இதன் விளைவாக எனக்கு 'ஒரு வருடம் ஹாஸ்டலில் தங்கக் கூடாது' என்று தடை விதித்து விட்டார்கள்'' என்று நினைவு கூர்கிறார் அமைச்சர்.

**அ**.இ.அ.தி.மு.க.வில் மாவட்ட மாணவர் அணித் தலைவர், ஒன்றியச் செயலாளர் போன்ற பதவிகளை வகித்திருக்கிறார். கட்சித் தேர்தலில் (1980 ல்) போட்டியிட்டு வெற்றி பெற்றிருக்கிறார். இரண்டு வருட தி.மு.க. ஆட்சியில் பல முறை சிறை சென்றிருக்கிறார். 1988 லிருந்து தேர்தலில் நிற்க ஸீட் கேட்டுக் கொண்டிருந்தாலும், 1989 ல், ஜெ. அணியில் இருந்த போதுதான் ஸீட் கிடைத்ததாம்.

''நான் கட்சியில் கடுமையாக உழைக்கும் ஒரு தொண்டனாக இருந்தும், பல காரணங்களை முன்னிட்டு, தலைவர் (எம்.ஜி.ஆர்) காலத்தில் எனக்குத் தேர்தலில் போட்டியிட சான்ஸ் கிடைக்கவில்லை. ஆனால் அம்மா (ஜெ.) இந்தத் தொண்டனின் உழைப்பை அங்கீகரித்து இருக்கிறார்.... எனக்கு மாவட்டச் செயலாளர் பொறுப்புக் கொடுத்தது மட்டுமல்லாமல், 1989 ல் திருப்பத்தூர் தொகுதியில் சேவல் சின்னத்தில் போட்டியிட வாய்ப்புக் கொடுத்தார். ஆனால் கழக ஓட்டுக்கள் பிரிந்ததால் தோற்றேன். மீண்டும் 1991 ல் அதே தொகுதியில் நின்று வெற்றி பெற்றேன். எளிய குடும்பத்தில் பிறந்து வந்த எனக்கு மந்திரி பதவி கொடுத்துக் கௌரவித்திருக்கிறார் அம்மா. இதற்காகக் காலமெல்லாம் அவருக்கு நன்றியுடையவனாக இருப்பேன்'' என்று கூறி உணர்ச்சி வசப்படுகிறார் அமைச்சர்.

''வட சென்னை அனல் மின் நிலையம்



எப்போது செயல்படத் துவங்கும்?''

''1993 ம் ஆண்டு 210 மெகாவாட் சக்தி கொண்ட முதல் பிரிவு செயல்பட ஆரம்பித்துவிடும். இந்தத் திட்டத்தைத் தவிர, தூத்துக்குடி விரிவாக்கம், இயற்கை வாயுவைக் கொண்டு நரிமணத்தில் மின் திட்டம், நெய்வேலி மூன்றாம் அனல் திட்டம் என்று பல திட்டங்கள் இருக்கின்றன.''

அமைச்சர் கடகடவெனப் பேசுகிறார். சட்டமன்றச் சுருக்கெழுத்தாளர்கள் கூடப் பல சமயங்களில் இவர் வேகப் பேச்சை எழுதச் சிரமப்படுகிறார்கள். பாக்கெட்டில் ஒரு பிள்ளையார் படம் 'டிரான்ஸ்பரன்ட்' ஆகத் தெரிகிறது.

''நான் பிள்ளையார் பட்டி பிள்ளையாரின் பக்தன். அவர் என் தொகுதியில் தான் இருக்கிறார். எந்தக் காரியத்தையும் இவரை வணங்கித்தான் ஆரம்பிப்பேன்.''

அமைச்சரின் மனைவி பெயர் நளாயினி. மூன்று மகன்கள். நேரம் கிடைத்தால் கையில் டென்னிஸ் மட்டையை எடுத்துக் கொள்வார் அமைச்சர்.

''சென்னையில் உள்ள கூவம், பக்கிங்காம் கால்வாய்கள் சுத்தப்படுத்தப்படும் என்று பல வருடங்களாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஒன்றும் நடக்கவில்லையே!''

''இதற்கான ஆய்வுகள் தீவிரமாக நடந்து கொண்டிருக்கின்றன. இவைகளைச் சுத்தப்படுத்தி படகுப் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்தால், பெருகும் நகர ஜனத் தொகைக்கு மிகவும் வசதியாக இருக்கும். புரட்சித்தலைவி நகரவளர்ச்சிக்காக ஆயிரம் கோடிக்கு மேல் செலவழிக்க இருக்கிறார். நிச்சயமாக, இந்தத் திட்டங்கள் செயல் படுத்தப்படும்.''

அமைச்சருக்கு, முதல்வர் இரண்டு முக்கிய விஷயங்களைக் கவனிக்கும் படி சொல்லியிருக்கிறார். ஒன்று, மின் வெட்டு இருக்கவே கூடாது. அடுத்தது, கிருஷ்ணா தண்ணீர் விரைவில் சென்னைக்கு வர ஏற்பாடு செய்வது.

''சமீபத்தில் தான் கிருஷ்ணா நீர் திட்ட வேலைகளை மேற்பார்வையிட்டு, முடுக்கி விட்டுவிட்டு, வந்தேன். அதே போல் எங்கள் பதவிக் காலத்தில் மின் உற்பத்தியை அதிகப்படுத்த, நான் ஏற்கெனவே சொன்னது போல் பல திட்டங்களைச் செயல் படுத்த இருக்கிறோம். பிள்ளையார்ப்பட்டி பிள்ளையாரின் கடாட்சத்திலும், புரட்சித் தலைவியின் ஆசீர்வாதத்தோடும் எடுத்த காரியங்களை வெற்றியுடன் முடிப்பேன்'' என்று விடை கொடுக்கிறார் அமைச்சர்.

சந்திப்பு : ப்ரியன்
படம் : ராஜன்




# ஸ்போர்ட்ஸ் கருவிகள்: உலகத் தரத்திற்கு உள்நாட்டிலேயே!

எல்லாத் துறைகளுக்கும் தேவைப்படுவது போல் விளையாட்டுப் பொருள்களுக்குக் கூட மிகச் சிறந்த தொழில்நுட்பம் இன்றியமையாதது. இதில் கவனம் செலுத்தவில்லையென்றால் அவற்றைப் பயன்படுத்துகிற விளையாட்டு வீரர்கள் தோல்வியைத்தான் தழுவ வேண்டும்!

உதாரணத்திற்கு, விளையாட்டு வீரர்களின் கால்களால் உதைபடும் கால் பந்தை எடுத்துக் கொள்ளுங்கள்; அதன் மேலுள்ள முப்பத்திரண்டு பட்டைகளும் ஒரே சீராக- சம எடை கொண்டதாக - மென்மையானதாக இருக்க வேண்டும். அப்போதுதான் உதைக்கும் வீரரின் கோல் இலக்கை நோக்கிச் சரியான திசையில் பந்து செல்லும். கால்களுக்கும் பாதுகாப்பளிக்கும். இந்தத் தொழில் நுட்பத்தில் சிறிது குறையேற்பட்டாலும் வீரர்களின் கால்கள் எசகுபிசகாகி விடும்!

இதே போல்தான் கிரிக்கெட் 'பேட்'களும். வேகமாக வீசப்படும் பந்துகளைச் சட்டென்று மின்னல் வேகத்தில் அடிக்க வேண்டுமானால் கிரிக்கெட் மட்டைகள் இலேசானவையாக இருக்க வேண்டும். அதே சமயத்தில் அடிக்கும் வேகத்தில் உடைந்து போகாத அளவுக்கு உறுதியானவையாகவும் இருக்க வேண்டும். இவற்றைவிட முக்கியமாக அதிவேகப் பந்து வீச்சுக்களைச் சமாளித்து அடிக்கும் போது, அந்த அதிர்ச்சியை வீரர்களின் கைகளுக்குத் தராமல் மட்டைகளே தாங்கிக் கொள்ளுவதாகவும் இருக்க வேண்டும். இல்லையென்றால் ஒரு ஓவருக்குள்ளாகவே வீரர்கள் களைத்துப் போய் விடுவார்கள்!

இத்தனை குணங்களும் கொண்ட மரம் எது தெரியுமா? 'இங்கிலிஷ்வில்லோ' என்று அழைக்கப்படும் மரம்தான். இந்த மரங்கள் இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, காஷ்மீர் போன்ற ஒரு சில இடங்களில் மட்டும்தான் விளைகின்றன. இருப்பினும் இந்த மரங்களைக் கிரிக்கெட் மட்டைகளாகப் பதப்படுத்தும் பக்குவம் - தொழில் நுட்பம் இங்கிலாந்தில் மட்டும்தான் இருக்கிறது என்பதால் காஷ்மீரில் விளையும் மரங்களைக் கூட நாம் இங்கிலாந்துக்கு அனுப்பித்தான் பதப்படுத்தி வாங்க வேண்டியிருக்கிறது.

இது ஒருபுறமென்றால், மறுபுறம் கிரிக்கெட் மட்டைகளுக்கான கைப்பிடிகள். மட்டையால் பந்தை அடிக்கும் போது ஏற்

← விட்டல்



பத்ரிநாதன்





ராமநாதன் கிருஷ்ணன்

படும் அதிர்ச்சி, கிரிக்கெட் வீரரின் கைகளுக்கு வராமல் தடுத்து நிறுத்துவதில் பெரும் பங்கு வகிப்பது இந்தக் கைப்பிடிதான் என்பதால், இதிலும் மிகுந்த கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. மூங்கிலால் ஆன இந்தக் கைப்பிடிக்கு எல்லா மூங்கில்களும் பயன்படுவதில்லை. சிங்கப்பூரில் விளையும் ஒரு வகையான பிரத்யேக மூங்கிலைத்தான் அனைவரும் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது!

அடுத்ததாக டென்னிஸ் ராக்கெட்டை எடுத்துக் கொள்வோம். முன்பு இவை மரத்தால்தான் செய்யப்பட்டன. அதனால் வீரரின் வேகமான தாக்குதலில் உடைந்து போன கதைகளும் உண்டு. கூடவே சீதோஷ்ண நிலை மாற்றங்களால் மரம் வளையவும், முறுக்கிக் கொள்ளவும் வாய்ப்புக்கள் இருந்ததால் ராக்கெட்டுகளைப் பாதுகாப்பதற்கு மிகுந்த சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது.

இந்தச் சிரமங்களைக் குறைப்பதற்காக இரும்புச் சட்டங்களைக் கொண்ட ராக்கெட்டுகளைத் தயாரித்தார்கள். அது மரத்தை விடக் கனமானதாக இருந்ததால் அதிலும் வீரர்களுக்குச் சிரமம் இருந்தது. எனவே, இப்போது, மரத்தைப் போல் இலேசானதாகவும், இரும்பைப் போல் உறுதியும் கொண்ட கிராஃபைட் என்ற கனிமத்தால் டென்னிஸ் ராக்கெட்டுகள் தயாரிக்கப்படுகின்றன.

வெளிப்புறச் சட்டங்கள் கிராஃபைட் என்றால், உட்புறத்திலுள்ள வலைப் பின்னல் எதனால் என்கிறீர்கள்! 'ஷை ஷீப்' என்றழைக்கப்படும் ஆடுகளின் குடல் நாரிலிருந்து தயாரிக்கப்படுகின்றன. இதற்கென்றே ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் பிரத்யேகமான ஆடுகள் வளர்க்கப்படுகின்றன! குடல் நார்கள் சிங்கப்பூரில் பதப்படுத்தப்படுகின்றன!

நமது விளையாட்டு உபகரணங்கள் உலகத் தரம் வாய்ந்ததாக இருக்க வேண்டுமானால் இதுவரை நாம் அவற்றை இறக்குமதிதான் செய்ய வேண்டியிருந்தது. அதன் காரணமாக விலையும் அதிகமாகத் தர வேண்டிய நிலை. உதாரணத்திற்கு, உலகத் தரம் வாய்ந்த டென்னிஸ் ராக்கெட் ஒன்றை நாம் இறக்குமதி செய்தால் அதன் விலை சுமார் நான்காயிரம் ரூபாய் வரை ஆகும்.

ஆனால், ''இனி அப்படிப்பட்ட நிலை இல்லை. அதே ராக்கெட்டை எங்கள் நிறுவனம், இப்போது சுமார் இரண்டாயிரத்து ஐநூறு ரூபாய்க்கே தயாரித்துத் தருகிறது!'' என்கிறார்கள் டன்லப் நிறுவனத்தின் தயாரிப்புப் பிரிவு உதவித் தலைவர் எஸ். பத்ரிநாதன், தொழிலக உதவித் தலைவர் வி. ரகுநாதன் ஆகியோர்.

அது சரி, தரம் எப்படி?

''சுருக்கமாகச் சொல்வதென்றால் இன்றைய டென்னிஸ் நட்சத்திரங்களான ஸ்டெஃபி கிராஃப், ஜான்மெக்கன்ரோ போன்றவர்கள் பயன்படுத்திக் கொண்டிருக்கும் ராக்கெட்டுகள், எங்கள் டன்லப் நிறுவனத்தின் தயாரிப்புகள்தான். இதற்கு மேல் எங்கள் ராக்கெட்டுகளின் தரம் பற்றி வேறு என்ன சொல்வது!'' என்கிறார் டன்லப் நிறுவனத்தின் தரத்துறை மேலாளர் டி. வி. ஜே. விட்டல்.

''நானும் சரி, என் மகன் ரமேஷ் கிருஷ்ணனும் சரி, ஆரம்பத்திலிருந்தே டன்லப் ராக்கெட்டுகளைத்தான் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம்!'' என்கிறார் பிரபல டென்னிஸ் வீரரான ராமநாதன் கிருஷ்ணன்.

வி. ரகுநாதன்



நூறாண்டுகளுக்கு முன்பு இங்கிலாந்தில் தோற்றுவிக்கப்பட்ட டன்லப் நிறுவனம், விளையாட்டுச் சாதனங்களைத் தயாரிப்பதிலும் அவை உலகத் தரமுள்ளவை என்பதிலும்

நமக்கென்ன பெருமை என்கிறீர்களா? இப்போது நம் நாட்டிலுள்ள டன்லப் நிறுவனம் முற்றிலுமாக இந்திய நிர்வாகமாகி விட்டது. அதுதான் இப்போது உலகத் தரமுள்ள விளையாட்டுப் பொருள்களைத் தயாரித்து வெளிநாடுகளுக்கெல்லாம் ஏற்றுமதி செய்து கொண்டிருக்கிறது என்பதுதான் விசேஷம்!

இந்தியாவிலேயே சில விளையாட்டுப் பொருள்களை ஒருசிலர் தயாரிக்கிறார்கள் என்றாலும், இந்தியத் தேவைகளுக்கு மட்டுமின்றி, வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யக்கூடிய அளவுக்கு டன்லப் நிறுவனம் மட்டும்தான் கல்கத்தாவிலுள்ள தனது தொழிலகத்தில் தயாரிக்கிறது. இனி பாட்மின்டன், நீச்சல், ஹாக்கி, ஸ்க்வாஷ் போன்ற விளையாட்டுக்களுக்கான உபகரணங்களையும் தயாரிக்கத் திட்டமிட்டிருக்கிறது.

''இப்படி விளையாட்டு வீரர்களுக்கான உபகரணங்களைத்தான் எங்கள் நிறுவனம் தயாரிக்கிறது என்பதல்ல; எல்லோருமே தேகப் பயிற்சிகளின் மூலம் தங்கள் உடலைப் பாதுகாத்துக் கொள்ளும் வகையிலும் நாங்கள் கவனம் செலுத்துகிறோம். அதற்காக 'கீப் ஃபிட் கிட்'டையும் தயாரித்து விற்பனை செய்கிறோம். அது ஒரு ரப்பர் ஷீட். அதில் பதினாறு வகையான உடற்பயிற்சி முறைகளை அச்சடித்திருக்கிறோம். வேலைகள் காரணமாக அடிக்கடி வெளியூர்களுக்கு டூர் போகக்கூடிய நிலையிலிருப்பவர்கள் கூட அதைச் சுலபமாக மடித்துத் தங்களுடன் எடுத்துச் செல்லலாம். போகுமிடங்களில் அந்த ரப்பர் ஷீட்டை விரித்து வைத்துக் கொண்டு, அதிலுள்ள பயிற்சி முறைகளைப் பார்த்துப் பயிற்சிகளைச் சுலபமாகச் செய்யலாம்!'' என்கிறார்கள் டன்லப் நிறுவனத்தினர்.

பேட்டி, படங்கள் :
ஆர். முத்துஸ்வாமி







## அரசியல் தீபாவளி!

தீபாவளியன்று அதிகாலை மு.க., ஜெக்கு ஃபோன் செய்தால் என்ன பேசுவார்? மூப்பனார் மத்தாப்பு கொளுத்தும் போது வாழப்பாடியார் வந்து சேர்ந்தால் என்ன உரையாடல்? அத்வானி ஸ்வீட் விழுங்கும் சமயம் நரசிம்மராவ் திடீர் விஜயம் செய்தால் என்ன சொல்வார்?

அரசியலையும் தீபாவளியையும் இணைத்து தமாஷ் பண்ணுங்கள். ஒரு தபால் கார்டில் எழுதப்படும் சிறந்த சிரிப்பு சம்பாஷணைக்கு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகைப் பரிசு. பிரசுரமாகும் இதர துணுக்குகளுக்கு சன்மானம். ''அரசியல் தீபாவளி'' என்று தலைப்புத் தந்து எழுத முடிவு தேதி : 28.10.91. ஆசிரியர், கல்கி, சென்னை - 32 என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுத வேண்டும்.



**கல்கி**



**பாலு** ஜுவல்லர்ஸ்

**பொன் விழா ஆண்டு : :தங்க நகைப் பரிசுத் திட்டம் - 7**

# சக்தி பைனான்ஸ். ரூ.400 கோடி பெருமதிப்புள்ள "சக்தி"குழுவின் ஓர் அங்கம்.




சக்தி குழு பல்வேறு தொழில் சாதனைகளின் முன்னோடி. நிதி, போக்குவரத்து, வேளாண்சார் தொழில்களை உள்ளடக்கிய சக்திகுழு இந்தியத் தொழில் துறையின் இமயம்.

மாறுபட்ட தொழில்களில் சாதனை புரிந்து, மக்களின் தேவைகளை உணர்ந்து வெற்றியை பகிர்ந்து கொள்ளும் அதன் சிறப்புத்தன்மை இக்குழுவின் வளர்ச்சியில் பிரதிபலிக்கிறது.

ஆறே ஆண்டுகளில் ரூ.100 கோடிக்கு மேலாக டெபாசிட் திரட்டிய சக்தி பைனான்ஸ், ரூ.400 கோடி பெருமதிப்புள்ள சக்தி குழுவின் ஓர்




அங்கமாக திகழ்வது, அக்குழுவுக்குப் பெருமை. சக்தி பைனான்ஸ் டெபாசிட்தாரர்கள் தங்கள் டெபாசிட்டுக்கு என்றென்றும் உறுதியும் பாதுகாப்பும் சக்தி பைனான்ஸில் கிடைக்கிறது என்ற உணர்வில் டெபாசிட் செய்து, மகிழ்வோடும் மனநிறைவோடும் இருப்பதில் வியப்பு ஒன்றுமில்லை.

சக்தி பைனான்ஸ் ஆறு மாநிலங்களில் 36 கிளைகளுடன் (24 கிளைகளில் பாதுகாப்பு பெட்டக வசதி செய்யப்பட்டது) மக்கள் சேவையில் தனது பணியை விரிவு படுத்தியுள்ளது.

UPC-SF-15/91




# சக்தி பைனான்ஸ் லிமிடெட்

## ஆண்டுகள் ஆறு! கோடிகள் நூறு!

டாக்டர் நா. மகாலிங்கம் - தலைவர்

பதிவு அலுவலகம்: 475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர் - 641 018.

# பத்திரிகை சுதந்திரத்தில் பண்பாடு மறவாதவர்



கோயங்காவுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்றவரும், எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் 55 ஆண்டு காலமாகப் பணியாற்றிக் கொண்டிருப்பவருமான 'மாஸ்டர்' சேஷாத்திரி, கோயங்காவின் சிறப்பியல்புகளை உணர்த்தும் சில சம்பவங்களை நினைவு கூர்கிறார்.

●● ஒரு வெள்ளைக்கார நிறுவனத்தில் துபாஷியாகப் பணியாற்றிக் கொண்டிருந்தார் கோயங்கா. அது 1928 ம் ஆண்டு. தங்கள் நலனை மேல் சபையில், பிரதிபலிப்பார் என்ற எண்ணத்தில், அவரை அந்தச் சபையில் உறுப்பினராக்கினார்கள் வெள்ளைக்காரர்கள். அப்போது கோயங்காவுக்கு வயது 24. மேல் சபையில், ஆங்கில அரசு, சுப்பிரமணிய பாரதியின் பாடல்களைத் தடை செய்ய வேண்டுமென்று தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தது. தேசிய எண்ணம் கொண்ட பல உறுப்பினர்கள் அதை எதிர்த்தார்கள். வெள்ளைக்காரர்களா ு உறுப்பினராக்கப்பட்ட கோயங்கா தீர்மானத்தை எதிர்க்க மாட்டார் என்றே பலர் நினைத்தார்கள். மாறாக கோயங்கா, அந்தத் தீர்மானத்தைக் கடுமையாக எதிர்த்தது மட்டுமல்ல, பாரதியின் பாடல்களைப் புகழ்ந்தும் பேசினார். வெள்ளைக்காரர்களே அசந்து போனார்கள்.

●● ஒரு மனிதரின் கொள்கைகளை, அரசியல் நடவடிக்கைகளைப் பத்திரிகையில் கடுமையாக விமர்சனம் செய்வார். ஆனால் தனிப்பட்ட முறையில் தாக்குவது போலச் செய்தி வெளியிட மாட்டார். 1977 ம் ஆண்டு, தேர்தல் நேரம். இந்திரா தோற்று விடுவார் என்பது ஓரளவு முடிவு செய்யப்பட்ட சமயம். அப்போது எதிர்க்கட்சித் தலைவர் சொன்னதாக எங்கள் கல்கத்தா நிருபர் ஒரு செய்தி அனுப்பியிருந்தார். "Indira is finished" என்பது செய்தியின் தலைப்பு. அச்சேறும் முன்பாக அதைப் பார்த்த கோயங்கா, ''தலைப்பு தனிப்பட்ட முறையில் தாக்குவதாக இருக்கிறது. Mild ஆகப் போடுங்கள்'' என்று கூறி மாற்றினார்.

●● 1967 ம் ஆண்டு தேர்தலின் போது பக்தவத்சலம் தொகுதியைச் சுற்றிப் பார்த்த எங்கள் நிருபர், ''Bakthavatchalam has no chance'' என்று செய்தி கொடுத்தார். அதைப் பார்த்த கோயங்கா, ''நாம் சாதக பாதகங்களை எழுதலாமே தவிர, உறுதியாக எதையும் கூறக் கூடாது. இதுவரை நடுநிலையாக இருக்கும் ஒரு வாக்காளன், 'தோற்றுப் போகப் போகும் ஒருவருக்கு நாம் ஏன் வாக்குப் போட வேண்டும்?' என்று மாறும் வாய்ப்பு இருக்கிறதல்லவா'' என்று அறிவுரை கூறினார்.

●● ஒரு காரியத்தைச் சாதிக்க வேண்டுமானால், கடுமையாக உழைப்பார். மகாத் துணிச்சல். ஒரு முறை நல்ல மழைக் காலத்தில் இரண்டு கப்பல்களில் எங்கள் பத்திரிகைக்குச் சோவியத் ரஷ்யாவிலிருந்து நியூஸ் பிரிண்ட் வந்தது.... காகித ரீல்களைப் போட்டு வைக்க நல்ல கிடங்கு

## அடுத்த இதழில்.....

## ●● தீபாவளி வருகிறது எண்ணெய்க்கெங்கே போகிறது?

- சிறப்புக் கட்டுரை

(Godown) எங்களுக்குச் சென்னையில் கிடைக்கவில்லை. கப்பல்கள் வர இன்னும் இருபது நாட்களே இருந்தன. இந்நிலையில் எங்கள் அலுவலக வளாகத்திலேயே கிடங்கு கட்டினார் கோயங்கா. அதற்கான வேலையின் போது, மணல் எடுத்துப் போவது, செங்கல் வண்டிகளைத் தள்ளுவது போன்ற காரியங்களில் அவரே ஈடுபட்டார். அலுவலக வாயிலின் இடது பக்கம் இன்னமும் அந்தக் கொட்டகை இருக்கிறது.

●● கோயங்கா அடிப்படையில் ஒரு காங்கிரஸ்காரர். கம்யூனிஸ்ட் கட்சியோடு எந்தக் காலத்திலும் சமரசத்திற்குப் போகாதவர். ஒரு முறை ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாடு அவர்களின் மகளுடைய கல்விக்காக கோயங்காவின் மகன், பி.டி. கோயங்கா பண உதவி செய்தார். ஆனால் ஈ.எம்.எஸ். ''தர்ம காரியம் போலப் பணம் வாங்க மாட்டேன்; அதற்குப் பதிலாகப் பத்திரிகையில் கட்டுரைகள் எழுதலாம் என்றால் சொல்லுங்கள்'' என்றார். அவரது தன்மான வாதம் ஏற்கப்பட்டது. அவரும், பல கட்டுரைகள் எழுதினார். இந்தியாவில் கம்யூனிஸம் தோன்றிய முறை, வளர்ந்த முறை ஆகியவை கட்டுரைகளில் வெளிவந்த செய்திகள். இதைக் கண்ட கேரள காங்கிரஸ் தலைவர்கள் சிலர், கோயங்காவிடம் சென்று புகார் சொன்னார்கள். ஆனால் கோயங்கா ''அதில் எந்தத் தவறும் இருப்பதாகத் தெரியவில்லை. கம்யூனிஸத்தை நாம் ஒப்புக் கொள்வது என்பது வேறு; கம்யூனிஸம் வளர்ந்த வரலாற்றை அறிந்து கொள்வது என்பது வேறு'' என்று கூறி அவர்களை அனுப்பி வைத்தார். பின்னர் என்னிடம் ''என் மகன் செய்தது முற்றிலும் சரி. நானாக இருந்தாலும் அவனைப் போல் தான் நடந்து கொண்டிருப்பேன்'' என்றார்.

●● பச்சையப்பன் கல்லூரியில் மாணவர்களின் இரண்டு கோஷ்டிகள் மோதிக் கொண்டன. சம்பவத்தை நேரில் பார்த்த எங்கள் நிருபர், Rowdism in Pachaiappa's என்று செய்தி கொடுத்தார். மறுநாள் மாணவர் பட்டாளம் எங்கள் அலுவலகத்தை முற்றுகையிட்டது. ''மன்னிப்புக் கேள்! கோயங்கா ஒழிக!'' என்றெல்லாம் கோஷமெழுப்பினார்கள். ஆனால் கோயங்கா எதற்கும் பயப்படவில்லை. ''மன்னிப்புக் கேட்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. வேண்டுமானால் நீங்கள் உங்கள் தரப்பு வாதத்தை எழுதிக் கொடுங்கள். அதைப் பரிசீலித்து, பிரசுரிப்பதா, வேண்டாமா என்று நான் முடிவு செய்கிறேன்'' என்று அவர்களிடம் கூறி விட்டார். மாணவர்களும் ஸ்டேட்மென்ட் எழுதிக் கொடுத்து விட்டுப் போனார்கள்.

●● 1942 ல், ஆகஸ்ட் போராட்டத்தின் போது வெள்ளைக்கார அரசு பத்திரிகைகளுக்கு Pre-Censorship; கொண்டு வந்தது அதாவது, செய்திகளை அரசே தணிக்கை செய்து கொடுக்கும். அதைத்தான் அச்சடித்து நாம் வெளியிட வேண்டும். கோயங்கா கடுமையாக இதை ஆட்சேபித்த போதிலும் அரசை எதிர்த்து ஒன்றும் செய்ய முடியவில்லை. தணிக்கைக்கு உட்படவும் விரும்பவில்லை. முடிவில் காந்திஜியின் ஆலோசனைப்படி பத்திரிகையையே ஆறு மாத காலம் மூடி வைத்தார்!

தொகுப்பு : ப்ரியன்

### தாகூர் சொன்ன பதில்!

ரவீந்திரநாத் தாகூர் யார், எந்தப் பொருளுக்கு நற்சான்று கேட்டாலும் கொடுத்து வந்தார். அவர் காரியதரிசி, ''இப்படி நீங்கள் நற்சான்று வழங்கினால், அப்புறம் உங்கள் நற்சான்றிதழ் இல்லாத பொருளே இல்லாமல் போய் விடும்!'' என்றார்.

''அப்படிப் போகாது!'' என்று தாடியை உருவிய தாகூர், ''பிளேடுகளுக்கு நற்சான்றிதழ் கேட்டு என்னிடம் யாரும் வர மாட்டார்கள்!'' என்று சிரித்தார்.

- ரா. விழிநாதன்.





# ரத்ததானம், ரத்த வியாபாரம் ஆகலாமா?

ஒரு பெண்ணுக்கு அறுவைச் சிகிச்சையின்போது இரத்தம் தரவேண்டி வந்தது. அந்தப் பெண்ணின் கணவர் ஸ்பெஷலாகக் கேட்டுக் கொண்டார். ''டாக்டர் என் மனைவிக்கு எந்த ஆணின் ரத்தமும் தரக் கூடாது. பெண்ணின் ரத்தம் மட்டுமே செலுத்துங்கள்!''

இன்னொரு சமயத்தில், வேறு விதமான வேண்டுகோள் வந்ததாம். ''என் உடம்புக்கு இன்ன ஜாதிக்காரரின் ரத்தம் செலுத்தக் கூடாது...'' என்று!

'இரத்த வங்கிகளும், சென்னையில் இரத்தம் செலுத்தும் பணிகளும்' என்ற தலைப்பில் நடந்த கருத்தரங்கு ஒன்றில் கேட்ட பல செய்திகள் இப்படி அதிர்ச்சி தருகிற மாதிரி இருந்தன.

நுகர்வோர் நடவடிக்கைக் குழுவினரும் (ஸி. ஏ. ஜி); 324-ஏ1. மாவட்ட அரிமா சங்கமும், தமிழ்நாடு மருத்துவர்கள் சங்கமும் இணைந்து நடத்திய மனம் திறந்த மாநாடு இது!

தொடக்க உரை ஆற்றிய ஸி. கே. கரியாலி ஐ. ஏ. எஸ். மிகவும் உணர்ச்சி வசப்பட்டுப் போய்த் தாம் சந்திக்க நேர்ந்த மரணங்களைப் பற்றிச் சொன்னார்.

''கல்கத்தாவில், ஒரு பிரசவத்தின் போது, மிக ஆரோக்கியமாக இருந்த ஒரு பெண்ணுக்குத் தேவையில்லாத போதே இரத்தம் செலுத்தப்பட்டது. அதில் இருந்த நோய்த் தொற்றின் காரணமாக அந்தப் பெண் இறந்து போனாள்.''

''இன்னும் ஒரு தமிழ்நாட்டுச் சம்பவத்தில் ஒரு நிறைமாத கர்ப்பிணிக்கு இரத்தப் போக்குக் கண்டது. படித்த பெண்ணாயிருந்தும், அவள் நிலைமையின் தீவிரத்தைத் தெரிந்து கொள்ளாமல் வீட்டு வேலைகளை எல்லாம் முடித்து விட்டுத் தனியார் மருத்துவமனை ஒன்றுக்குப் போய்ச் சேர்ந்தாள். அவளுக்குத் தேவையான குறிப்பிட்ட இரத்த வகை அந்த வட்டாரத்தில் எங்குமே கையிருப்பில்லை. அவள் பரிதாபமாகச் செத்துப் போனாள்.''

பின்னது பற்றாக்குறையால் ஏற்பட்ட மரணம் எனில் முன்னது கவனக்குறைவு. தனியார் மருத்துவ மையங்கள் பலவற்றில் தேவையான இரத்தம் ஏற்றப்படுவதற்கு முன்னால் 'மாண்டேட்டரி டெஸ்ட்' என்னும் தரக்கட்டுப்பாட்டுச் சோதனைக்கு அதனை அனுப்புவதில்லை என்கிற குற்றச்சாட்டைச் சொன்னார் கரியாலி.

இதற்குப் பதில் கூறுவது போல் பின்னால் பேசிய டாக்டர் விமலா, ''மூழ்கும் மனிதனுக்கு எப்படியாவது முதல் உதவி என்கிற முறையில் ரத்தம் தந்தாக வேண்டியிருக்கும் போது மாண்டேட்டரி டெஸ்ட் சாத்தியமே இல்லை. முதலில் அவன் உயிரைக் காப்பாற்றி விட்டு, அப்புறம் வேண்டுமானால், தேவைப்பட்டால் பின்விளைவுகளைக் கவனித்துக் கொள்ளலாம்'' என்றார். இந்தக் கருத்து ஏற்றுக் கொள்ளும்படியான நியாயமாகவே பட்டது.

மருத்துவக் கல்வித் துறைத் துணை இயக்குநர் டாக்டர். கே. எம். ராதா கிருஷ்ணன் பேசும் போது, ''அரசு மருத்துவமனை உட்படச் சென்னையில் பணத்துக்கு இரத்தம் பெறுகிற வழக்கம் அடியோடு போய் விட்டது'' என்றார். ''மருத்துவமனைகளின் இரத்த வங்கி வசதிகளுக்கு ஏற்ப இரத்த யூனிட்டுகளுக்கு ஒரு விலை உண்டு. இதை விலை என்று சொல்வதை விட நடைமுறைச் செலவு என்றே குறிப்பிட வேண்டும் என்றார். ''அரசு மருத்துவமனை வங்கிகளில் சேகரிக்கப்படுவதை, வேறு அரசு மருத்துவமனைகளுக்கு மட்டுமே மாற்றப்பட முடியும்'' என்றும் சொன்னார் டாக்டர் கே. எம். ஆர்.

''பம்பாய் போன்ற பெரு நகரங்களில் 'பெடரேஷன் ஆஃப் பிளட் பாங்க்' என்று செயல்படுகிறது. பல மருத்துவமனைகளின் இரத்த வங்கிகள் ஒருங்கிணைந்து ஒன்றுக்கு ஒன்று கைகொடுக்கின்றன. அம்முறை சென்னையிலும் வர வேண்டும்'' என்ற ஒரு நல்ல கருத்தும் சொல்லப்பட்டது.

''முழு இரத்தமும் (whole blood) செலுத்தப்படும் முறைக்கு மாற்றாகப் பகுதி பகுதியாகத் தேவைப்படுகிற கூறுகளை மட்டும் பிரித்துச் செலுத்துகிற முறையைப் பின்பற்ற வேண்டும்'' என்று ஆலோசனை சொன்னார் அப்போலோ இரத்த வங்கியின் டாக்டர் பாப்ஜீ. இதன் மூலம் அரிதான ரத்தம், அதிகமான நபர்களுக்குப் பயன் தருகிறது. எனவே, ரத்த தானம் ரத்த வியாபாரம் ஆவதையும் தடுக்கிறது.

தொகுப்பு : 'யெஸ்பால்'



**கல்கி**




1991
அக்டோபர் 20
மலர் : 50
இதழ் : 12
பிரஜோத்பத்தி
ஐப்பசி 3

## அஸ்ஸாம் - பஞ்சாப் - காஷ்மீர்

அஸ்ஸாம், பஞ்சாப், காஷ்மீர் ஆகிய மாநிலங்களில் பாரதத்துக்குக் கவலை தரும் சூழ்நிலை தொடர்கிறது. அஸ்ஸாம் முதல்வரின் சமாதான முயற்சிகள் படுதோல்வி அடைந்தன. கைதான பயங்கரவாதிகள் அனைவருக்கும் பொது மன்னிப்புக் கூடத் தரத் தயாராயிருந்தார் அவர். ஆனாலும் உல்ஃபா பயங்கரவாதிகள் வழிக்கு வரவில்லை. தங்கள் பயங்கரவாதப் போக்கையும் கைவிடவில்லை. தற்போது நமது ராணுவம் பெருமளவில் அஸ்ஸாமிய வனங்களில் புகுந்து, உல்ஃபா பயங்கரவாதிகளைச் சுற்றி வளைத்துக் கைப்பற்றும் முயற்சியில் இறங்கியுள்ளது. இதற்குச் சில வட்டாரங்களில் எதிர்ப்புக் கிளம்பவே செய்யும். ஆயினும் உள்துறை அமைச்சர் உறுதியாக இருந்து முழுமையான வெற்றிக்கு முயற்சி செய்ய வேண்டும். உல்ஃபா அமைப்பின் முதுகெலும்பு முறிந்ததாகத் தெரிய வந்த பிறகே ராணுவம் பின்வாங்க வேண்டும். 'சில அசம்பாவிதங்கள் நடக்குமே, அப்பாவி மக்கள் சில பலரும் துன்பத்துக்குள்ளா வார்களே' என்றால், நடக்கக் கூடும்தான். மறுப்பதற்கில்லை. கண்டிப்பாக அவ்வாறெல்லாம் நடக்காமல் கவனித்துக் கொள்ளுமாறு ராணுவத் தலைமைக்கு ஓர் எச்சரிக்கை விடுவது பலன் தரக் கூடும். சில துன்பங்களை எதிர் நோக்க வேண்டியிருக்கும் என்பது உண்மையேயானாலும் மறுபடி ஒரு முறை அரை குறைக் காரியம் பண்ணிப் பயனில்லை. அவ்வாறு செய்தால் உல்ஃபா மீண்டும் தலை தூக்கும் போது, மேலும் பலம் பெற்று விளங்கும். இதற்கு இடம் தரக் கூடாது.

காஷ்மீரைப் பொறுத்தமட்டில் அங்கே தீவிரவாதிகளுடன் தாம் பேச்சு வார்த்தை நடத்தவும் தயாராக இருப்பதாக உள்துறை அமைச்சர் கூறியுள்ளார். யாருடன் பேச்சு என்பது ஆராயப்படுகிறது! அழைப்பை யார் யாருக்கு யார்மூலம் அனுப்புவது என்று யோசிக்கப்படுகிறது!

தீவிரவாதிகள், பயங்கரவாதிகளுடன் பேசிப் பயனில்லை. அவர்களுக்குத் தெரிந்தது துப்பாக்கி மொழி மட்டுமே. அவர்கள், தங்களைத் தூண்டி விடுகிறவர்களின் கைப்பாவைகள். பாரதமே நமதாயிருக்க, மாநில அளவில் தனிநாடு கோருதல் அபத்தம் என்பதை அறியாதவர்கள். எனவே அமைச்சர், காஷ்மீரிலும் பஞ்சாபிலும் உள்ள மிதவாதத் தலைவர்களை அழைத்துப் பேச வேண்டும். மக்கள் அமைதியையே விரும்புகிறார்கள் என்பதை உணர்த்தி, மக்கள் ஆட்சி மலர அவர்கள் உதவியைக் கோர வேண்டும். யோசனைகளை வரவேற்க வேண்டும். இதற்காக இன்றுவரை உறுதியாக இருந்து வந்துள்ள சில விஷயங்களில் மத்திய அரசு விட்டுக் கொடுத்து, சமரசம் செய்து கொள்ள நேர்ந்தாலும் பாதகமில்லை. மக்கள் ஆட்சி மலர்ந்து, மக்களின் வாழ்க்கைத் தரமும் உயர்வது உறுதியானால், திருப்தியுற்ற மக்கள் மத்திய அரசின் முயற்சிகளுக்குப் பூரண ஆதரவு தருவார்கள்.

இன்னொரு முக்கியமான அம்சம், பயங்கரவாதிகளைத் தூண்டி விடும் அண்டை நாட்டு அரசுகளைச் சமாளிப்பது ஆகும். இதற்கு அசாதாரண ராஜதந்திரம் தேவைப்படுகிறது. பஞ்சாப், காஷ்மீர் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதில் உள்துறை அமைச்சரை விட வெளி உறவுத்துறை அமைச்சருக்குப் பொறுப்பு அதிகம் என்பது உணரப்பட வேண்டும்.

நான்கு முனைகளில் பிரச்னைகளை அணுக வேண்டும். ஒன்று, பயங்கரவாதிகளை ஒடுக்குதல். இரண்டு, மிதவாதிகளை ஊக்குவித்தல். மூன்று, மக்கள் ஆட்சி மலரவும் அவர்கள் வாழ்வு மேம்படவும் திட்டங்கள் வகுத்தல். நான்கு, பாகிஸ்தான், சீனா, பங்களாதேஷ், இலங்கை ஆகிய அண்டை நாடுகளுடன் உறவுகளைச் சீர்படுத்தி ஊடுருவலுக்கு முற்றுப்புள்ளி வைத்தல்.

இதற்கெல்லாம் உள்துறை அமைச்சரின் முயற்சி மட்டும் போதாது; மந்திரிசபை முழுவதும் முழுமூச்சுடன் பாடுபட வேண்டும். எதிர்க் கட்சியினரும் ஒத்துழைக்க, ஒரே குரல் ஒலிக்க வேண்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஐ.எஸ்.ஐ. தரத்தையும் கொடுக்கிறது; பாதுகாப்பும் அளிக்கிறது!

☛ ரகுபதி

கமலா ரொம்ப நாளாகச் சொல்லிச் சொல்லி, கணவர் ராமகிருஷ்ணன் ஒரு மிக்ஸி வாங்கிக் கொண்டு வந்தார். அம்மிக் கல்லுக்கும் ஆட்டுக்கல்லுக்கும் டாடா சொல்லிவிட்டு ஐந்தே நிமிஷத்தில் சட்டினி அரைத்து விடலாம் என்று சந்தோஷப் பட்டாள் கமலா.

பிளக்கைச் செருகி, ஸ்விச் குமிழைத் தட்டியதும் மிக்ஸி ஒரு நூறு மில்லி போட்ட மாதிரி தள்ளாடிக் குதித்தது. பட்பட்டென்று பட்டாசுச் சத்தம் மாதிரி உள்ளுக்குள்ளிருந்து வந்தது. அவ்வளவுதான். ஆட்டம் க்ளோஸ்!

கமலாவின் பக்கத்து வீட்டுக்காரி புஷ்பா பிற்பகல் அரட்டையடிக்க வந்தவள், பரிதாபகரமான மிக்ஸியையும், அதைவிடப் பரிதாபகரமாய் இருந்த கமலாவையும் பார்த்துவிட்டு, "என்ன ஆச்சு?" என்றாள் கிரைப்வாட்டர் அம்மாள் பாணியில்.

"நீயே பாரேன்!"

மிக்ஸிக்கு அழகாகப் பெயர் மட்டும் போட்டுவிட்டால் போதுமா? ISI முத் திரை இல்லையே இதில்! இதைப் போய் எப்படி வாங்கினாய்?"

தூக்கிவாரிப் போட்டது கமலாவுக்கு. "இதற்கெல்லாம் கூட ஐ.எஸ்.ஐ முத்தி ரையா?"

"பின்னே வேறெதற்கு? இந்த மிக்ஸி யைப் பற்றி கன்ஸ்யூமர் கவுன்சிலில் புகார் கொடுத்துவிட்டு, இனி வாங்குவதையாவது ஐ.எஸ்.ஐ முத்திரையோடு வாங்கு!"

"சரி வேறு எதற்கெல்லாம் இந்த முத்திரை உண்டு?"

சூடா என்ன இருக்கு என்று ஓட்டலில் கேட்ட மாதிரி, "பிரஷர் குக்கர், காஸ் ஸ்டவ், குளிர்சாதனப் பெட்டி, தொலைக் காட்சிப் பெட்டி, ஸ்டெபிலைசர், கார் டயர், கார்பன் பேப்பர், பனியன், போர்வை, துண்டு, நெசவுநூல்...."

"அப்புறம்?"

"பிஸ்கட், சேமியா, பால்பவுடர், உணவுப் பொருள்களில் சேர்க்கும் கலர் பவுடர்கள், வனஸ்பதி, காஸ் சிலிண்டர், பம்ப். ஸ்டவ், திரி ஸ்டவ், ஸ்டீல், பல்பு, இஸ்திரிப் பெட்டி, மின் அடுப்பு, இம்மெர்ஷன் ஹீட்டர், பேட்டரி செல், சிமெண்ட்...."

இப்படி, பொருள்களுக்குத் தர நிர்ண யம் செய்து ஐ.எஸ்.ஐ முத்திரையிடும் அலுவலகம் ஒன்று சென்னையில் இருக் கிறது. மத்திய அரசின் கீழ் இயங்கும் இந்த அமைப்பு இருக்கிற இடமே 'தர'மணி.

மிகப் பிரம்மாண்டமான லாபரெடரி. வகை வகையாய், கம்ப்யூட்டரை ஜோடி சேர்த்துக் கொண்டு கண்சிமிட்டும் இயந்தி ரங்கள்.

"அதி நவீனக் கருவி எது?"

புதுக்கருக்கு அழியாத, மஹா மஹா பெரிய இயந்திரம் ஒன்று, காட்போர்டு அட்டையில் போர்த்தி மூடிக்கொண்டு இருந்தது. "இப்போதுதான் அயல் நாட்டி லிருந்து வந்திருக்கிறது. இந்தியாவிலுள்ள ஐ.எஸ்.ஐ. பரிசோதனைக் கூடங்களிலேயே, சென்னைக்குத்தான் முதன் முதலாக வந் திருக்கிறது! இது சிமெண்ட் தர நிர்ணயம் செய்ய!" என்றார் இயக்குநர் தட்சிணா மூர்த்தி.

மற்றொரு உபகரணம், கனிமப் பொருள்களின் தரத்தை - குறிப்பாக இரும் பின் தரத்தை - அறிய உதவுகிறது. கார்பன்-சல்ஃபர் குறிப்பிட்ட அளவு இருக் கிறதா என்று பரிசோதித்துச் சொல்லுகிறது இந்த 'லீகோ' இயந்திரம். காஸ் அடைத்த பிறகு, காஸ் சிலிண்டர் வெடித்து விடாமல் இருக்குமா என்று சிலிண்டரைப் பரிசோதிக் கிறார்கள். உபயோகப்படுத்தியிருக்கும் இரும்பின் தரம் மட்டும் அல்ல, வெல்டிங் செய்யப்பட்ட தரமும் பரிசோதிக்கப்படு கிறது. எண்பது முதல் தொண்ணூறு கிலோ பிரஷர் கொடுத்துச் செய்யப்படும் இந்தப் பரிசோதனையில், வெடிப்பு ஏற்படும்

சிலிண்டர்களை, தாட்சண்யமின்றி ஒதுக்கித் தள்ளி விடுகிறார்கள்.

காஸ் அடுப்பில், வாயுக் கசிவு சோதனை, ஸ்டவ்களில் வெப்பத்திறன் சரியாக வெளிப்படுகிறதா என்று பார்க்கும் சோதனைகளும் நடத்தப்படுகின்றன. ''இப்படி முத்திரை இடுவது என்று வந்த பிறகு, ஆரம்பத்தில் 50-54 சதவிகித வெப்பத்திறனே கொண்ட ஸ்டவ்களைத் தயாரித்தவர்கள், இப்போது 60 சதவிகித வெப்பத் திறன் வெளிப்படும் ஸ்டவ்களைத் தயாரிக்கத் தொடங்கி விட்டார்கள். இது உபயோகிப்பாளர்களுக்கு நன்மைதானே?''

அதிகபட்ச வோல்டேஜ் இன்சுலேஷன் (சகிப்புத்திறன்) பரிசோதனைக்கு எலக்ட்ரிகல் லாபரெட்டரி.

பாதுகாப்பு அம்சத்தைப் பரிசோதிக்க பிரஷர் குக்கர் பரிசோதனைகள்.

நெசவாளருக்கு வழங்கப்படும் நூலின் இழை ஒரே மாதிரியாக இருக்கிறதா என்று ஒரு கம்ப்யூட்டர் இயந்திரம் கண்டுபிடித்துச் சொல்லுகிறது. சொல்லுவதென்றால், அச்சடித்துக் கையில் கொடுத்துவிடுகிறது!



☛ பரிசோதனைக் கூடத்தில்......

ஆபத்து விளைவிக்கக்கூடிய, உடல் நலத்துக்குக் கேடு விளைவிக்கக்கூடிய, பொருள்களுக்கு எல்லாம் தர முத்திரை கட்டாயம். ட்யூப் லைட்டுகளுக்குத் தர முத்திரை கட்டாயமில்லை; ஆனால் பல்புகளுக்குக் கட்டாயம்.

''சமுதாயத்துக்குப் பண்பும் கலாசாரமும் எப்படி அவசியமோ, அப்படித்தான் தயாரிப்புக்களுக்குத் தரக்கட்டுப்பாடும் என்று ராஜாஜி சொல்லியிருக்கிறார். பாருங்களேன், இப்போதெல்லாம் தொழிலதிபர்கள் நிதி விஷயங்களில் கவனம் செலுத்துவது போலவே, தர விஷயத்திலும் அக்கறை காண்பிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். எங்களிடம் அவர்களாகவே தங்கள் பொருள்களைக் கொண்டு வந்து பரிசோதனைக்கு உட்படுத்தி ஐ.எஸ்.ஐ. முத்திரைகளை வாங்கிச் செல்கிறார்கள்'' என்கிறார் டெபுடி டைரக்டர் ஜெனரல் ரகுபதி.

''இங்கே ஊழலுக்கு வழியில்லையா? பணத்தைத் தள்ளிவிட்டு முத்திரை குத்திக் கொள்ள முடியாதா?''

''சாத்தியமே இல்லை!'' என்கிறார் ரகுபதி. ''ஒவ்வொரு முறையும் ஒவ்வோர் அதிகாரி பரிசோதனை செய்வார். அதுவும் இங்கு தயாராகும் பொருள்களை இந்தியாவின் இன்னொரு மூலையில் இருக்கும் எங்கள் அலுவலகத்தைச் சேர்ந்த ஒருவர் ஒரு சாதாரண வாடிக்கையாளராகக் கடைக்குச் சென்று வாங்கி தரப் பரிசோதனைக்கு உட்படுத்துவார். அதோடு, ஒவ்வோர் ஆண்டும் ஐ.எஸ்.ஐ. தர முத்திரையைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். இந்த நிலையில் எத்தனை பேரைக் 'கவனித்துக் கொள்ள' முடியும்?'' என்று சொன்ன ரகுபதி பொது மக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். ''எந்தப் பொருள் வாங்கினாலும் 'பில்'லையும் பத்திரமாக வைத்திருங்கள். சங்கடம் வரும்போது தயாரிப்பாளரிடம் புகார் கொடுக்க இதுவே ஆதாரம். கன்ஸ்யூமர் பாதுகாப்பு அமைப்புகள் எல்லா நகரங்களிலும் சிறப்பாக இயங்கி வருகின்றன. தயாரிப்பாளரிடமிருந்து திருப்திகரமான நஷ்ட ஈடு பெற இவ்வமைப்புகள் மூலம் புகார் செய்யலாம். ஐ.எஸ்.ஐ. முத்திரையுள்ள பொருள்களையே வாங்குங்கள்!''

சந்திப்பு : சாருகேசி
படங்கள் : யோகா

## தஞ்சை மாவட்டம், திருக்கோடிக்காவலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பூரணா புஷ்களா சமேத ஸ்ரீ ஐயனார்திருக்கோயில் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேக திருப்பணி

தெய்வத் தமிழ்நாட்டில் தஞ்சைத் தரணியில் "தக்ஷிண கங்கை" எனப் புகழ்பெற்ற காவிரி நதியின் வடகரையில் பாடல்பெற்ற சிவஸ்தலங்களுள் ஒன்றானதும் சோலை என பொருள் படும் கா என்று முடியும் ஐந்து சிவஸ்தலங்களுள் ஒன்றானதும், சித்தரும் முனிவரும் செல்வரும் புலவரும் சிந்தையுள் ஒன்றி "சிவாய நம" என்று இடைவிடாது ஈசனை துதிக்கும் திவ்யஸ்தலமாம் திருக்கோடிக்காவல் என்று தற்போது வழங்கிவரும் புண்ணிய க்ஷேத்திரத்தில் அருள்மிகு ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ திருக்கோடீஸ்வரர் திருக்கோயில் தென்கிழக்கு எல்லையாய் மேற்கு நோக்கி அமர்ந்து அருள்புரியும் ஸ்ரீ மஞ்சினி ஆண்டவர் என்னும் மலையாள ஐயனார் பூரணை புஷ்கலை சக்தியரோடு அருள்பாலிக்கும் ஆலயம் கல்லணை பூம்புகார் சாலையில் கும்பகோணத்திலிருந்து கிழக்கே 20 கிலோ மீட்டர் தொலைவில் சாலையை ஒட்டி அமைந்துள்ளது. டி ஆலயம் பழுதுபார்த்து சீரமைத்து பக்தர்கள் ஆன்மீக அடியார்கள் மற்றும் கிராமவாசிகள் பூரண ஒத்துழைப்புடன் திருப்பணியை நிறைவேற்றி நிகழும் பிரஜோத்பத்தி-மாதம் ஐப்பசி-மாதம் 17 ம் தேதி (3-11-91) ஞாயிற்றுக்கிழமை உத்திர நட்சத்திரம் கூடிய சுப யோக சுபதினத்தில் காலைமணி 9க்கு மேல் 10க்குள் தனுர் லக்னத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சார்ய ஸ்வாமிகள் பரிபூரண அனுக்கிரஹங்களுடனும் திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீன கர்த்தா 23-வது குருமகா சன்னிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் அவர்கள் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 21-வது அதிபர் கயிலை மாமுனிவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமி தம்பிரான் அவர்கள் முன்னிலையிலும் மகா கும்பாபிஷேகம் நடைபெறும். பக்த கோடிகள் அனைவரும் பெரும் பங்கு கொண்டு எல்லாம் வல்ல கண்கண்ட கலியுக தெய்வம் ஸ்ரீ சாஸ்தாவின் திருவருள் பெற்று உய்யுமாறு பணிவன்போடு கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,

**N. சுந்தரம்,**

தக்கார்/ஆய்வர், திருப்பனந்தாள் - 612 504, தஞ்சாவூர் ஜில்லா

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி :

**P. ஸ்ரீநிவாஸ ஐயர்,**

கீழ அக்ரஹாரம், திருக்கோடிக்காவல் - 609 802

திருவிடைமருதூர் வட்டம், தஞ்சாவூர் ஜில்லா.

# சிவரஞ்சனி



எங்கோ பார்த்த முகமாக இருக்கிறதே என்று மண்டைக்குள் ஒரே குடைச்சல். அதனால் ஆரம்பக் கல்லூரிக் காட்சிகளை - அதில் இடம்பெற்ற ஆட்ட பாட்டங்களைச் சரிவர மனத்தில் பதித்துக் கொள்ள முடிய வில்லை. என்றாலும், அதன் காரணமாகக் கதையோட்டத்துக்கோ, நமக்கோ எந்த இழப்பும் இல்லை.

ஆகா! சன்ரைஸ் காப்பி, ஸ்ரீபெட் பாட்டில் போன்ற விளம்பரங்களில் வருகிறவர் அல்லவா இவர் (சுசித்ரா) என்பது திடுமெனப் பளிச்சிட, படத்தில் மனம் லயிக்கத் தொடங்கும் அதே நேரத்தில், நாயகனும் நாயகியும் காதல் கொண்டு விடப் படம் சூடுபிடிக்கத் தொடங்கி விடுகிறது.

''திருமணம் ஆகிப் போகும் போது எந்தவொரு தமிழ்ப் பெண்ணும் தூய்மையானவளாகவே போக வேண்டும் என்கிற ஒரு காரணத்துக்காகத்தான் இப்போது உன்னை எதுவும் செய்யாமல் விட்டு விடுகிறேன்'' என்று இரண்டு மூன்று இக்கட்டான சந்தர்ப்பங்களில் தத்துவம் பேசும் நாயகன், நாயகி தரும் ஒரேயொரு முத்தத்தில் அதனைக் காற்றில் பறக்க விட, அவர்களிடையே காதல் மலர்கிறது. இதனிடையில் விரோதப்பட்டுப் போகும் இரு தரப்புப் பெற்றோரும் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்துத் தடைவிதிக்க, காதலனிடமிருந்து அவளைப் பாதுகாக்க நாயகியைச் சுற்றிப் பூனைப் படை (மைனஸ் ஏ.கே. 47)! காதலர்கள் தடை மீறல், வீட்டை விட்டு ஓட்டம், முடிவில் பெற்றவர்கள் மன மாற்றம்... நீ நாம ரூபமுலகு நித்ய ஜெய மங்களம்.

கதை - பலர் ஏற்கெனவே தடம் பதித்த ஒற்றையடிப் பாதை. அதனைக் கொண்டு சென்றிருக்கும் விதத்தில் தெரிவது மெலிதான வித்தியாசம். துணை : எஸ். ஏ. ராஜ்குமாரின் இசை (உ.ம். ''அழகே அழகே...''). வெளிப்புறக் காட்சிகளைப் படமாக்கியிருக்கும் விதம் கண்களை நிறைக்கும்.

நிறைவு : நாயகன், நாயகியின் இளமை; ஜெய்கணேஷ் - கிட்டி மோதல்; செயற்கையாகப் புகுத்தப்படும் நகைச்சுவைக்கு இடமளிக்காதது.

பாலியஸ்டர் பருத்தி.

- சி. ஆர். கே.

## 5

# வாஷிங்டன் வைரம்

'இன்று காலை ஒருமுறை வைரமூர்த்தியிடம் பட்டதே போதும்.... மறுபடியும் ஒட்டுக் கேட்க வேண்டாம்' என்று நிர்மலா நிர்மானித்தாள்.

உள்ளே வைரமூர்த்தி, ரகுராமனுக்கு அடுக்கடுக்காக உபதேசம் செய்வதைத் தொடர்ந்தார்.

ரகுராமனுக்கும் வைரமூர்த்திக்கும் தகராறு ஏற்பட்டுச் சுமார் மூன்று ஆண்டு களாகின்றன. ரகுராமன் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து, ஆராய்ச்சிக்கு எந்த பேராசிரியரிடம் அமரலாம் என்று முடிவு செய்ய வேண்டிய கட்டம் வந்தது. உலக சரித்திரத்துறையில் அங்கிருந்த பேராசிரியர் நாலு பேரிடமும் பேசிய பிறகு வைரமூர்த்தியிடமே சேரலாம் என்று எண்ணம் தோன்றியது. அவரும் தமிழ் நாட்டவர், தனக்கு நிறைய உதவி செய்வார் என்று ரகுராமன் எதிர்பார்த்தான். அவருக்கு இருந்த புகழ் அவனைக் கவர்ந்ததும் உண்மை.

எந்தத் தலைப்பில் ஆராய்ச்சியைத் தொடங்குவது என்பது பற்றி அவரிடம் பேசினான். அமெரிக்காவில் முதலில் வந்த இந்தியக் குடும்பங்கள் பற்றிச் சரித்திர ஆராய்ச்சி செய்யலாம் என்று அவர் சொன்னார். ரகுராமனுக்கு அவ்வளவாகப் பிடிக்க வில்லை. வாஷிங்டன், டி.சி. அருகிலிருப்பதாலும் அது அமெ ரிக்காவிலேயே முக்கிய நகரமானதாலும் அதைப் பற்றிய ஆராய்ச்சியை ரகுராமன் செய்ய விரும்பினான்.

''வாஷிங்டன் டி.சி.யா? அதைப்பற்றி எழுதாதவர் இல்லை; எழுதப்படாத நூல்கள், கட்டுரைகள் இல்லை. இன்னும் என்ன இருக்கிறது?'' வைரமூர்த்தியின் எதிர்வாதம்.

வைரமூர்த்தி சரித்திரப் பேராசிரியராயிற்றே! சொல்வதில் உண்மையில்லாமலிருக்குமா? ரகுராமன் தயங்கினான். இருந்தா லும், யோசனை செய்து பதில் சொல்வதாய்ச் சொன்னான்.

இரண்டு பேருக்குமே இக்கட்டான நிலை. தன்னிடம் சேர்ந்து படிக்கும் மாணவர் எண்ணிக்கையைக் கூட்டிக் கொள்வது பேராசிரியர்களுக்குப் பெருமை. 'ரகுராமன் சேரவில்லை என்றால் தேவையற்ற இழப்பாகிவிடும்' - இது வைரமூர்த்தியின் பிரச்னை. 'வாஷிங்டன் டி.சி.யைப் பற்றிப் புதிதாக ஆராய்ச்சிக் குறிப்புகள் கிடைக்காவிட்டால் நேரம் வீணாகும், பிறகு வைரமூர்த்தி சொல்லும் தலைப்பில் தொடங்க வேண்டும்' - இது ரகுராமனின் கவலை.

கடைசியில் வைரமூர்த்தியே ரகுராமனிடம் சொன்னார். அவன் விருப்பப்படியே 'வாஷிங்டன், டி.சி.' பற்றி 'பிஎச்.டி.' பட்டப் படிப்புக்குத் தயாரிக்கலாம். ஆனால் நான்கு ஆண்டுகளுக்குள் முடித்துவிட வேண்டும்.

நாலரை ஆண்டுகள் ஓடிவிட்டன.... இப்போதுதான் ஒரு வழியாக ரகுராமன் அவனுடைய எல்லா ஆராய்ச்சிக் குறிப்பு களையும் ஒழுங்குபடுத்தி வருகிறான்.... அவன் அங்கு இருக் கும் ஒவ்வொரு மாதமும் வைரமூர்த்தியின் 'கிராண்ட்' பணம் தான் செலவாகும். அவருக்கு வேறு 'பிராஜக்டுகள்' இல்லையா என்ன?

இதுதான் தகராறு.... இல்லை..... தகராறில் ஒரு பகுதி.

''அதில்லை..... என்னுடைய மாமா, மாமி இவர்கள் இந்தியாவிலிருந்து இன்னக்கி வாஷிங்டனுக்கு வருகிறார்கள். நான் 'நேஷனல் ஏர்போர்ட்' போய் அவங்களைக் கூட்டி வரணும்.... கொஞ்சம் வேலை இருக்கு.''

வைரமூர்த்திக்கு ரகுராமனின் வேண்டுகோள் வெறுப்பை அளித்தது. ''மிஸ்டர் ரகுராமா'.... உங்க போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. இன்னக்கி நீங்க போகலாம்.... உங்க 'பிஎச்.டி.' பத்தி நாம இன்னும் நிறைய பேசணும். நாளை காலை பதினோரு மணிக்கு என்னை மறுபடியும் வந்து பாருங்க.'' கண்டிப்பாகச் சொல்லி விட்டார் வைரமூர்த்தி.

அவருக்கு நன்றி சொல்வதா, மனசாரத் திட்டுவதா என்பது புரியாமல் ''தேங்க்ஸ், டாக்டர்'' என்று மட்டும் சுருக்கமாகச் சொல்லிவிட்டு ரகுராமன் அங்கிருந்து நகர்ந்தான்.

**வாசன்**

இரண்டு ஆண்டுகளுக்கு முன் கோடை யில் மூன்று மாதங்களில் ரகுராமன் வேலை ஒன்றை ஏற்றுக் கொண்டான். அப்போது அவன் மேல்படிப்பு மாணவனாகத்தான்

கருதப்பட்டானே தவிர, 'இம்மிக்ரேஷன்' ஆபீஸில் அவனுக்கு வேலை செய்ய அனுமதி கொடுக்கவில்லை. 'சொன்னால் தானே தகராறு' என்று நினைத்து வேலையைத் தொடர்ந்தான். இதை எப்படியோ வைரமூர்த்தி தெரிந்து கொண்டார்.

வந்தது ஆபத்து! அன்றுமுதல் ரகுராமனை அவர் பயமுறுத்த ஆரம்பித்தார். பணத்துக்காக இல்லை - அவன் நேரத்துக்காக. தனக்குத் தேவையான ஆராய்ச்சி வேலைகளை நிறைய அவனிடம் கொடுத்து செய்யும்படி சொல்வார். இரண்டு ஆண்டுகளில் அவர் பெயரில் வெளியான கட்டுரைகள் யாவும் ரகுராமனின் வியர்வைத் துளிகளின் விளைவுதான். அவன் ஒத்துழைக்க மறுத்தால் 'இம்மிக்ரேஷன்' அதிகாரிகளிடம் சொல்லிவிடுவதாய்ப் பயமுறுத்துவார். அமெரிக்காவில் இன்னும் பல ஆண்டுகள் முறையாகத் தங்க ஆசைப்பட்ட ரகுராமனுக்கு வைரமூர்த்தியின் பயமுறுத்தல் கவலை கொடுத்தது. 'பிஎச்.டி' முடித்து வேலை வாங்கி, 'கிரீன் கார்டு' (அமெரிக்காவில் நிரந்தரமாகத் தங்க அனுமதிச் சீட்டு) கிடைக்கும் வரை வைரமூர்த்தியின் தாளத்துக்கு ரகுராமன் ஆட வேண்டிய நிலை ஏற்பட்டது. பரிதாபமான நிலை. பல்லைக் கடித்துக் கொண்டு நாட்களை ஓட்டினான். வைரமூர்த்தி ஏதாவது தப்புச் செய்தார் என்று துப்புக் கிடைத்தால் தாக்கு தலைத் திருப்பலாமே என்று அவன் எண்ணாத நேரமில்லை. அவ்வளவு ஆத்திரம் அவர்மேல்.

''மிஸ்டர் ரகுராமன்... இன்று மாலை உங்களிடம் நான் கொஞ்சம் பேச விரும்புகிறேன்... இது முக்கிய சமாசாரம்...''

ஓர் இளம்பெண் தன்னுடன் பேச வேண்டும் என்று கேட்டால் ரகுராமன் போன்றவர்களுக்குத் தயக்கம் ஏற்படுமா என்ன? மயக்கம்தானே ஏற்படும்.

''அப்படியா... எங்கே சந்திக்கலாம்?''

''வாஷிங்டன் டி.சி.யில் பழைய போஸ்ட் ஆபீஸ் கட்டடத்தில் நிறைய கடைகள் இருக்கே... அங்கே இந்தியன் ரெஸ்ட்ராண்ட் ஒன்று இருக்கே தெரியுமா?''

''தெரியும்.... ஆனா அங்கே....''

''கூட்டம் இருக்கலாம்... கூட்டமான இடத்துலே சந்திச்சிக்கிட்டா யாரும் அவ்வளவா கவனிக்கமாட்டாங்க. நாம பேசலாம்....''

''சரி..... அப்ப நான் ஏழு மணிக்கு வந்துடறேன். அதன் பிறகு 'ஏர்போர்ட்' போகணும். அங்கிருந்தே போயிடுவேன்.'' ரகுராமன் புறப்பட்டான்.

''தேங்க்ஸ்'', சிரித்து விடை கொடுத்தாள் நிர்மலா.

இவர்கள் பேசிக் கொண்டதைப் பின்





''உங்க ஏரியாவுல போலீஸ் தொந்தரவே இல்லையே... எங்க ஏரியாவுல பிச்சுப் புடுங்கறாங்க...''

''அட! நீ ஒண்ணு! எங்க ஏரியாவுல எல்லா போலீஸ்ும் ஆர். டி. ஓபன் பண்ணி பாஸ் புக்க எங்க கையில தந்துருவாங்க... கொஞ்சம் 'கலெண்டா' போயிடுது பாரு!''

– செண்பை. சதாசிவம்.

ணறையிலிருந்து கேட்ட வைரமூர்த்தியை இருவரும் கவனிக்கவே இல்லை.

## 6

**ச**ரியாக ஆறு மணிக்குத் தனது இரண்டாவது வேலையை முடித்துக் கொண்டு வெளியே வந்த நிர்மலாவுக்கு அன்று காலையிலிருந்த மனநிலை மாறியிருந்தது. ரகுராமன் தன்னிடம் பேச ஒப்புக் கொண்டது அவளுக்கு நிம்மதி அளித்தது.

பழைய போஸ்ட் ஆபீஸ் கட்டடத்து அருகில் அவள் வந்தபோது மணி ஆறே முக்கால். ரகுராமன் ஏழு மணிக்கு வருவதாய்ச் சொல்லியிருக்கவே, வெளியேயிருந்த ஒரு பெஞ்சில் உட்கார்ந்தாள். அங்கு காலையிலிருந்து பொருள்களை வண்டியில் வைத்து விற்றுக் கொண்டிருந்த வியாபாரிகள் வண்டிக் கடைகளை மூடத் தொடங்கினர். நடைபாதையில் இரண்டு பேர் 'நான் வீடில்லாதவன்' என்று எழுதப்பட்ட அட்டையைக் காட்டி, காசு கேட்டார்கள். நிர்மலா அமெரிக்காவுக்கு வந்த புதிதில் இங்கும் வீடில்லாதவர்கள் இருக்கிறார்களா என்று ஆச்சர்யப்பட்டாள். போகப் போகப் புரிந்தது. வாஷிங்டனிலேயே பல ஆண்டுகளாக மிட்ச்சல் ஸ்னைடர் என்பவர் வீடில்லாதவருக்காகப் போராட்டம் நடத்தி, அரசிடம் அவர்களுக்குச் சில சலுகைகள் வாங்கித் தந்தார். தனக்கிருந்த வேலை, வாழ்க்கையைத் தியாகம் செய்தவர், 1990ல் சொந்தக் காரணத்துக்காகத் தற்கொலை செய்து கொண்டார். இதைப்பற்றி நிர்மலா படித்த போதுதான் வீடில்லாதவர் பிரச்னை வாஷிங்டனில் மட்டுமில்லை அமெரிக்காவின் ஒவ்வொரு பெரிய நகரத்திலும் ஒரு தீராத, தீர்க்கப்படாத பரிதாப நிலை என்பதைப் புரிந்து கொண் டாள்.

நிர்மலா எழுந்து சென்று 'வீடில்லாதவன்' அட்டை பிடித்தவர்களுக்கு ஆளுக்கு ஒரு டாலர் போட்டு விட்டுத் திரும்பிய போது,

''ஹலோ...... மிஸ் நிர்மலா'' என்ற குரல் பின்னால் கேட்டது. ரகுராமன் அவளை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

**ப**டிகளில் இறங்கி இருவரும் உள்ளே நுழைந்ததும் அவர்களுக்குப் பின்னால் கையில் சிகரெட்டுடன் ஒருவன் நுழைந்தான். அவன் ஒரு வெள்ளை அமெரிக்கன். அவன், நிர்மலா அந்த இடத்துக்கு வருவதற்கு அரைமணி முன்னாலேயே வந்து விட்டான். அவள் வந்து உட்கார்ந்தது, 'வீடில்லாதவர்'களுக்குக் காசு போட்டது எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தான். அவள் கூர்ந்து கவனித்திருந்தாலும் அவன் அவளைக் கண்காணிப்பது அவளுக்குத் தெரிந்திருக்காது. அது போன்ற வேலையில் அவனுக்கு நிறைய பயிற்சி இருந்தது.

ஆளுக்கு ஒரு தட்டில் பூரியும், காய்கறியும் குடிக்க காப்பியும் வாங்கிக் கொண்டு உட்கார்ந்தார்கள். அவர்களையே கண்காணித்த வெள்ளை அமெரிக்கனை அவர்கள் கவனித்ததாகத் தெரியவில்லை.

நிர்மலா ஆரம்பித்தாள். ''நேற்று 'ஸ்மித்ஸோனியன்' கட்டடத்தில் வெடிகுண்டு விபத்துப் பற்றிப் படித்தீர்களா? டீ.வி.யில் பார்த்தீர்களா?''

''விவரங்களை அவ்வளவாகக் கவனிக்கவில்லை. ஆனால் செய்தி தெரியும்'' ரகுராமன்.

அந்த வெடிகுண்டு விபத்துக்கும் வைரமூர்த்திக்கும் நிச்சயமாகத் தொடர்பு உண்டு என்று தான் நம்புவதாக நிர்மலா விளக்கமாகச் சொன்னாள்.

சாப்பிடுவதை நிறுத்திவிட்டுக் கண் கொட்டாமல் அவளையே பார்த்துக் கொண்டு அவள் சொன்னதைக் கேட்டுக் கொண்ட ரகுராமனுக்கு, நம்புவதா வேண்டாமா என்று சட்டென்று முடிவு செய்ய முடியவில்லை.

நிர்மலா மேலே தொடர்ந்தாள். ''டாக்டர் வைரமூர்த்தி என்னை ரொம்பவும் பயமுறுத்தியிருக்கிறார். அவருடைய கூட்டாளியை வேறே நான் பார்த்து விட்டேன். அவன் முகத்தில் வலது கண்ணுக்குக் கீழே நீண்ட வடு இருக்கிறது. அவனும் இந்தியன் - தமிழ் பேசுகிறான். இப்போது ஸான்பிரான்ஸிஸ்கோ நகரத்துக்குப் போயிருப்பான் என்று நினைக்கிறேன்.''

''ஸான்பிரான்ஸிஸ்கோவுக்கு எதுக்குப் போகிறான்...அங்கேயும் ஏதாவது வெடி வைக்கவா?''

நிர்மலா சிரித்து விட்டாள். ''இல்லை. கொஞ்ச நாள் தலைமறைவாக இருக்குமாறு அவனுக்கு வைரமூர்த்தியின்

உத்தரவு.''

''அப்படியா? சரி.... மிஸ் நிர்மலா நான் என்ன செய்ய வேண்டும்?''

''மிஸ்டர் ரகுராமன்... எனக்கு வைர மூர்த்தியை நினைக்கும் போதெல்லாம் பயமாகவே இருக்கு.... அவர் ஏதோ ஒரு பெரிய தவறான விஷயத்தில் ஈடுபட்டிருக் கிறார் என்று நினைக்கிறேன்.....''

''இப்படி பயந்து கொண்டே நீங்கள் ஏன் அவரிடம் வேலை பார்க்க வேண்டும்?'' கேட்டுவிட்டானே தவிர ரகு ராமன் தன்னுடைய நிலையை உடனே நினைத்துப் பார்த்தான். 'நான் மட்டும் ஏன் அவரிடம் இப்படி மாட்டிக் கொண்டிருக் கிறேன்?' இந்த எண்ணமே அவனுக்கு எரிச் சலை மூட்டியது.

''மிஸ் நிர்மலா... எனக்கு ஓரளவு புரி கிறது... உங்களுக்கு என்னைப் பாதுகாப் பாக இருக்கச் சொல்கிறீர்கள் என்று நினைக் கிறேன்.... சரிதானே?''

நிர்மலாவின் முகம் சிவந்துவிட்டது. சில விநாடிகளில் அவள் முகத்தில் ஏதோ தீர்மானம் ஏற்பட்டதற்கான அறிகுறி தென்பட்டது.

''மிஸ்டர் ரகுராமன்.... வைரமூர்த்தி பற்றி எனக்குத் தெரிந்ததை வைர மூர்த்தியை நன்கு அறிந்த வேறு யாரிட மாவது சொல்லிவிட வேண்டும் என்று தோன்றியதால்தான் உங்களிடம் சொன் னேனே தவிர, மற்றபடி.... என்னை நானே பாதுகாத்துக் கொள்ள முடியும்.'' அவள் குரலை அவளாலேயே நம்ப முடிய வில்லை.

''மிஸ் நிர்மலா... என்னை மன்னித்து விடுங்கள்.... ஒரு பெண்ணுக்கு உதவுவது தான் ஆணுக்கு அழகு என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு. ஆனால் இது 1991 -ம் ஆண்டு... பெண்கள் தங்களுடைய உரிமை களையும் தன்னம்பிக்கையையும் உலக மெல்லாம் பறைசாற்றும் காலம்.... நானே டாக்டர் வைரமூர்த்தியிடம் சிக்கலான ஒரு விஷயத்தில் மாட்டியிருக்கிறேன்... அதை இப்போது விளக்கிச் சொல்ல எனக்கு விருப்பமுமில்லை.... நேரமுமில்லை.''

நிர்மலாவுக்கு அவன்மேல் சற்றுப் பரிதாபம் உண்டாயிற்று.

இருவரும் கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தனர். தங்கள் சிந்தனைகளை ஒழுங்கு படுத்திக் கொள்வது போல காப்பியைக் குடித்துக் கொண்டு தலையைக் குனிந்து கொண்டு இருந்தனர்.

சட்டென்று ரகுராமன் தலையைத் தூக்கி அவளைப் பார்த்தான். அவள், தட்டி லிருந்த உணவைப் புரட்டிக் கொண்டி ருந்தாள். அவள் இடதுகையை மெல்லத் தொட்டான். அவள் கையை இழுத்துக் கொள்ளவில்லை. அவனை ஏறிட்டுப் பார்த்தாள். ஒருவர் உணர்ச்சியை மற்றவர் எடைபோடுவது போல் சில விநாடிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

அவள் கையை மெல்ல அழுத்திக் கொண்டே, ''நிர்மலா... உங்களை எந்த விதமாகப் பாதுகாக்க முடியும் என்று தெரியவில்லை... நீங்கள் க வ ன ம ா க இருங்கள்... வை ர மூ ர் த் தி அவ்வளவு துணிச்சலாக எ தை யு ம் செய்யமாட்டார் என்று நினைக்கிறேன்.'' 'மிஸ் நிர்மலா'வில் 'மிஸ்' நீங்கியதானது அவர்க ளிடையே மனத்தளவில் இடைவெளி குறைந்ததைக் காட்டியது.

நிர்மலா நெகிழ்ந்து விட்டாள். ''தேங்க் யூ... மிஸ்டர் ரகுராமன்.. உங்கள் வார்த் தைகளே எனக்குப் பாதுகாப்புப்போல இருக்கு.'' தன் கையை அவனிடமிருந்து விடுவித்துக் கொண்டாள்.

''எனக்கு நேரமாகிவிட்டது... நான் ஏர்போர்ட்டுக்குப் போகணும்.''

''யார் வர்றாங்க?''

''என் மாமா, மாமி இரண்டுபேரும் நியூயார்க் வழியா ஒன்பது மணிக்கு வாஷிங் டன் வர்றாங்க... நான் அவங்களை அழைச் சுக்கிட்டுப் போகணும்... இன்னைக்குப் பகல் முழுக்க என் அபார்ட்மெண்டை ஒழுங்கு படுத்திக்கிட்டு இருந்தேன்.''

''எவ்வளவு நாள் தங்குவாங்க?''

''சுமார் இரண்டு மாசம்.''

''நான் ஏதாவது உதவி செய்யலாமா? என் அபார்ட்மெண்ட்டுக்குச் சாப்பிட நீங்க ளெல்லாம் நிச்சயம் வரணும்... சரியா?''

''ஓ.கே. நான் புறப்படணும்.... மெட்ரோ சென்டருக்குப் போய் அங்கி ருந்து ஏர்போர்ட்டுக்கு 'ப்ளு லைன்' எடுத் துக்கிட்டுப் போக நேரம் சரியாக இருக் கும்.''

''நானும் மெட்ரோ சென்டருக்குத்தான் போகணும்... சேர்ந்தே நடக்கலாமா?'' நிர்மலாவின் வேண்டுதலை மறுக்க முடிய வில்லை ரகுராமனால்.

அவர்கள் புறப்பட்ட சில விநாடிகளில் அந்த வெள்ளை அமெரிக்கனும் அவர் களைப் பின் தொடர்ந்தான். அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை விட எங்கே போகிறார்கள் என்பதில் அவன் அதிக ஆர்வம் காட்டியது போல் இருந்தது.

நிர்மலாவும் ரகுராமனும் வெவ்வேறு பக்கமாக இரயிலில் போனதைக் கவ னித்துக் கொண்ட வெள்ளை அமெரிக்கன், அருகிலிருந்த போனை எடுத்து வைர மூர்த்தியின் எண்களை இடது கை விரல்களால் சுழற்றினான். அவன் இடது புறங்கையில் பச்சை குத்திக் கொண் டிருந்தான்.

(தொடரும்)

# செரிலாக்

## நாள் முழுவதும் அருந்திட சமநிலைச் சத்துணவு

# மெனு

உங்கள் குழந்தைக்கு எப்போதும் செரிலாக் வீட் உணவின் நற்பலன்களை அளித்து வருகிறீர்கள். ஆனால் இப்போது உங்கள் குழந்தைக்கு 6 மாதங்களாகிவிட்டதால், குழந்தை உணவில் புதிய சுவைகளை அறிமுகப்படுத்த இதுவே ஏற்ற பருவம். ருசிமிகுந்த, ஊட்டச் சத்துக்கள் சமநிலையிலுள்ள செரிலாக் உணவு வகைகளான-செரிலாக் வீட்-ஆரஞ்சு, செரிலாக் வீட்-வெஜிடபிள், செரிலாக் வீட்-ஆப்பிள் -ஒவ்வொன்றும் உடல் வளர்ச்சிக்கு வேண்டிய முக்கிய ஊட்டச் சத்துக்களும், தாதுப் பொருட்களும், வைட்டமின்களும் சரியான சமநிலையில் கலந்த முழுமையான உணவு. உங்கள் குழந்தைக்கு பரவசமூட்டும் சுவைகளை வகைவகையாக அளிக்கும் ஏற்றதொரு மெனு. இரண்டு வயது வரையிலும், அதற்கு அப்புறமும் தொடர்ந்து தரக்கூடிய மெனு.

### உதயவேளை உற்சாகத்திற்கு

காலைச் சிற்றுண்டிக்கு, செரிலாக் வீட்-ஆரஞ்சின் பழச் சுவை நற்பலன்களை உங்கள் குழந்தைக்கு கொடுக்கலாம். பொறுக்கி எடுக்கப்பட்ட ஆரஞ்சுச் சுவையை, கோதுமை மற்றும் பாலுடன் கலந்து சிறப்பாகத் தயாரிக்கப்பட்டது. உங்கள் குழந்தையின் நாள் சுறுசுறுப்பாகத் தொடங்கிட உதவும் முழுமையான உணவு.




### மதிய உணவின் மனநிறைவு

மதிய உணவின்போது மற்ற எல்லாரையும் போல, உங்கள் குழந்தைக்குக் காய்கறிகள் தேவை. பசுமையான கேரட்டுகள் மற்றும் தக்காளியின் நற்பலன்கள் கோதுமை மற்றும் பாலுடன் கலந்த செரிலாக் வீட்-வெஜிடபிள், உங்கள் குழந்தைக்குக் கிடைப்பதோ திருப்தியான மதிய உணவு.




### அந்திவேளை ஆனந்தம்

நாள்முழுக்க விளையாடிக் களைத்த குழந்தைக்கு அந்தி சேர்த்தும் அருமையான விருந்து தேவை. சற்றே வித்தியாசமான உணவு கிடைத்தால் குழந்தைக்குப் பரவசமாகும். இருக்கவே இருக்கிறது செரிலாக் வீட்-ஆப்பிள். ஆப்பிள் பழங்கள், பால் மற்றும் கோதுமையுடன் கலந்த அருமைச் சுவை. உங்கள் குழந்தைக்கு வித்தியாசமான விருந்து.






பேக்கெட்டின் மேலுள்ள குறிப்புகளைப் பின்பற்றுக.
சொஸைட்டியின் தரமான தயாரிப்புகள்

**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக் அனுகூலம்-ஒவ்வொரு வேளை உணவிலும்**

போட்டிக் கதை - 8

# பிடிமானங்கள்

அகலமாய் விரித்த கோரைப் பாயில், சுருண்டுக் கிடந்த அப்பாவைப் பார்த்தவுடன் பிரேமாவுக்கு உள்ளிருந்த உல்லாசம் உருமாறி அதிர்ச்சியானகவலை உருவானது. அருமையான இலவம் பஞ்சு மெத்தை விரிக்கப்பட்ட கட்டில் வெறுமனே கிடக்க, தலைக்கு எதுவுமே கொடுக்காமல் படுத்திருந்த சங்கரன் அவளைப் பார்த்தவுடன், ''வாம்மா... என்ன...?'' என்று அழைத்தபடி எழுந்தார்.

''அப்பா... தரையில ஏம்பா படுக்கணும்? உடம்பு வலி எடுக்காதா...? தலைக்கு எதுவும் வைக்காமல் படுத்துத் தூங்கற அளவுக்கு என்ன கவலைப்பா...?''

''ஏதோ தோணித்து.. படுத்தேன்... மாப்பிள்ளை வரலை...?''

''இல்லை.. . நாளைக்கு என்னமோ விசேஷமான அனுக்கிரகம் செய்யறாங்களாம். அவங்க குடும்ப வழக்கமாம். நிறைய களேபரப்படுமாம். அதான் இன்னிக்கு நேரே இங்கே வந்து உங்களை அழைச்கட்டு வர உங்க மருமகனோட உத்தரவு...'' என்று சொன்னவளால் அப்பா



வின் அந்த அலங்கோல கோரைப் பாய் சயனம் தாங்க இயலாததாய் இருந்தது.

''அப்பா... மனசு சரியில்லையா...?''

''அப்படி ஏதும் இல்லையே...?''

''அப்புறம் ஏன் பாய் விரித்துப் படுத் திருந்தீங்க...?''

''சும்மா மாறுபாடா இருக்கட்டுமேனு படுத்தேன்.''

குனிந்திருந்த அ ப் பா வை நிமிர்ந்து நேராகப் பார்த்தாள் பிரேமா. அப்பாவிடம் தனிமை தட்டுப்பட்டு விட்டது. வெறுமை அவரை வாட்டி விட்டது. ஒவ்வொரு வார்த் தையிலும் பூ ட க மாக.. ஓர் ஒன்று மில்லாத் தன்மை வெளியானது.

சங்கரன் ஒரு பெரிய நிறுவனத் தில் ஆ பீ ஸ ர் க்ரேடில் பணியாற்றினார். நாள் காயிரம் தாண் டிய வருமானம் மணம் முடிக்க வேண்டிய வய தில் உள்ள மூன்று மகள்களை மறக்கச் செய்தது. கடைசியில் இரண்டரை லட்ச ரூபாயோடு ஓய்வு பெற்றார். ஹம்ஸா, கௌசல்யா, பிரேமா. ஹம்ஸா, கௌசல்யா இருவரும் அப்பா காட்டிய மாப்பிள்ளை களுக்கு மாலையிட்டு, மறக்காமல் தங்களுக் கென்று நிறைய வாங்கிக் கொண்டு பம்பாய், பெங்களூர் எனப் போய் விட்டனர்.

ஹம்ஸாவையும், மாப்பிள்ளையையும் தம்பதிகளாகப் பண்டம், பலகாரங்களுடன் வழியனுப்பி விட்டு வீட்டுக்கு வந்து கணக்குப் பார்த்தார் சங்கரன். இரண்டரை இலட்சத்தில் தொண்ணூறாயிரம் மட்டுமே மீதமிருந்தது. அப்போது அவரது கம்பீரம் குறைந்ததில்லை.

கௌசல்யாவுக்கு அம்பாசமுத்திரம் மாப்பிள்ளையைப் பேசி முடித்திருந்த வேளையில்.. காய்கறி வாங்கப் போன காமாட்சி.. எதிரே வந்த லாரியின் அல றலை, செவிடான காதினால் கேட்டுத் தெரிய முடியாமல் நசுங்கிப் போனாள். மனைவி போனதில் ஏறக்குறை பாதி கம்பீரம் போய் விட்டது. கௌசல்யாவும், பிரேமாவும் இருந்ததினால் அதை அவர் எளிதாக மறக்க, இனிதான குடும்பம் மீண்டும் உருவானது. கௌசல்யாவுக்கு அதே அம்பாசமுத்திரம் விஸ்வநாதனைப் பேசி முடித்தார்.

கோலாகலமாகக் கல்யாணம் செய்து, பெங்களூர் அனுப்பினார். ரயிலில் ஏறிப் புறப்பட்ட போது கௌசல்யா, 'எனக்கு மூத்தவளுக்குச் செய்ததில் பாதி கூடச் செய் யலை' எனக் கூறி முகம் கறுத்தாள்.

இரண்டு பேருக்கும் கரிசனப்பட்டு, துரிதப்பட்டு எந்தவித வித்தியாசமான குறை பாடும் இல்லாமல் திருமணம் செய்து வைத்தது இமாலயச் சாதனைதான். ஆனால், அதன்பின் எந்தவகையிலும் பணம் இல்லை சங்கரனிடம். பிரேமா மட்டும் ஆயிரத்து இருநூறு ரூபாய்ச் சம்பளத்திற்கு, முனிசிபாலிட்டி ஆபீஸ் க்ளார்க்காகப் போய்க் கொண்டிருந்தாள். தெருவில் இரண்டு வீடுகள் உண்டு. ஒன்றில் குடியிருந் தனர். இன்னொன்றில் பங்கஜம் மாமி இருந் தாள். ஒரு நாள் பிரேமாவுக்குத் தெரியாமல் பங்கஜம் மாமியிடம் எண்பதாயிரம் பணம் வாங்கி வந்து விட்டார்.

நாகர்கோவிலிலிருந்து ஜனார்த்தனன் வீட்டார் வந்தனர். தாயும் மகனும்தான் வந் தார்கள். நிறைய வேண்டாம் என்றார்கள். ஆனால் லட்ச ரூபாய்க்கு ஒரு லிஸ்ட் கொடுத்தார்கள். சங்கரன் மறுக்கவில்லை. திருமணம் நடந்தேறியது. மூன்று பெண் களின் கரையேற்றலும் முடிந்தது.

இந்த க்ஷணத்தில் அப்பாவிடம் என்ன பிடிமானம் உள்ளது. இந்த ஒரே வீடு. இது பிடிமானம் ஆகுமா? உயிரில்லாத ஒன்றைப் பிடித்துக் கொண்டு சந்தோஷப்பட முடி யுமா? மனித ஜீவராசி தேவை. அம்மா இல்லை. அக்கா இருவரும் எங்கோ தூரத் தில்... பக்கத்திலிருக்கும் என்னால்தான் பிடி மானம் கொடுக்க இயலும் அப்பாவுக்கு. ஆதரவு அளிக்க இயலும். இந்த அந்திமக் காலம் தனிமையையும், வெறுமையையும் விலக்கி இருக்க வேண்டும். என்ன செய்ய லாம்?

அப்பாவையும் நாகர்கோவில் அழைத்துப் போய் கூடவே வைத்துக் கொள்ளலாமா...? திடீரெனத் துள்ளி வந்தது எண்ணம். ஆம்!

''அப்பா... நான் ஒண்ணு கேட்பேன்.''

''கேளேன்...''

பெனிட்டோ குமார்

''நீங்க எங்க கூடவே இருந்துடுங்களேன்...''

''நடக்குமா...? ஒத்துக்கணுமே...''

''உங்களுக்குச் சம்மதம்தானே...?''

''என் மகளே... மூணு பெண்கள்லேயும்... எவளாவது இந்தக் கேள்வியைக் கேட்க மாட்டாளான்னு எத்தனை நாளா ஏங்குது தெரியுமா இந்த மனசு... தனிமையும் முதுமையும் ப்ளஸ், மைனஸ் மாதிரிம்மா. உங்கூட வர எனக்கு முழுச் சம்மதம். ஆனால் மாப்பிள்ளை, அவங்க அம்மா... சம்மதம் பிரதானமில்லையா...?''

''அது என் பொறுப்பு... அவங்க நல்லவங்கப்பா...''

''நான் கௌசல்யா... கூப்பிடுவாள்னு நினைச்சேன். ஹும்ஸா.. பம்பாய் ரொம்பக் கஷ்டம்.''

''அவங்களை விடுங்க. நான் இருக்கேன். நாளைக்கே தயாராகுங்க...'' அவளுடைய குரலில் ஒரு புதிய தெம்பு பிறந்தது.

''பிரேமா நான் வந்து உங்க கூட இருக்கறதனால... உங்களுக்குள்ள பின்னால பிணக்கு வந்தால் இதை விட எனக்குக் கஷ்டமா இருக்கும். எனக்கு ஆண் பிள்ளை கொடுக்காதது பகவானின் திட்டம். ப்ளான். அதை மாத்த முடியாது. பெண் குழந்தை பெத்தது பெருமையாத்தான் இருந்துச்சு. ஆனால் கடைசிக் காலம் பெண்ணோட வீட்ல கழிக்கறது நடைமுறையா... என்ன நினைப்பாங்களோ...?''

''இதுல என்ன நடைமுறை. என் ரத்தம் நீங்க. உங்க ரத்தம் நான். உங்களைக் கடைசிக் காலத்துல குழப்பமில்லாம வாழ வைக்க வேண்டியது எங்க கடமை... என்னோட கடமை...!''

**ம**றுநாள் காலை டவுன் பஸ் பிடித்து நாகர்கோவிலை அடைந்தார்கள். ஆட்டோ பிடித்து, வீட்டுக்குச் சென்ற போது கூட்டமாயிருந்தது. கூடியிருந்தவர்கள் அனைவரும் பஞ்சத்தால் அடிபட்ட பரம ஏழைகள்.

''என்ன அன்னதானம் கொடுக்கறீங்களா...?'' அப்பா கேட்டார்.

''தெரியலை. இதைத்தான் விசேஷம்னு சொன்னாங்க போல..''

பிரேமா திரும்பிய போது ஜனார்த்தனன் சிரித்துக் கொண்டு நின்றிருந்தான்.

''ஏன் லேட் பிரேமா? ஆறு மணிக்கே வந்துடச் சொன்னேனே.. மாமா வாங்க..''

''அன்னதானம்...?''

''எங்க தாத்தா இறந்த நாள் இன்னிக்கு. அவர் நிறைய அன்னதானம் பண்ணினார். சாகும் போது அவர் நினைவா வம்சம் இருக்கும் வரை பண்ணணும்னு சொன்னாராம். அம்மா ரொம்பப் பிடிவாதம்...''

''தப்பு இல்லையே...'' என்ற சங்கரன் கூடமாட ஏகப்பட்ட வேலைகள் செய்தார். கட்டுக் கட்டாக வாழை இலைகளைப் பிரித்து... இரண்டாக வெட்டி வெட்டிப் பிளந்தார். அடுக்கி வைத்தார். பந்தியிலும் சுறுசுறுப்பாகப் பரிமாறினார்.

**இ**ரவு பத்து மணிக்கு மாமியார் இல்லாத போது மென்மையாகக் கணவனிடம் ஆரம்பித்தாள் பிரேமா.

''என்னங்க... அப்பாவுக்கு ரொம்பக் கஷ்டம்...''

''என்ன கஷ்டம்...?''

''உடம்புல சத்து இல்லை. தெம்பு இல்லை. வயசு எழுபது. கொஞ்சம் நடந்தாலே மூச்சு முட்டுது...''

மாமனாரை நேராகப் பார்த்தான் ஜனார்த்தனன். அவர் வெள்ளையாகச் சிரித்தார்.

''அப்பா இந்த வயசுல தனிமையா இருக்கறது கஷ்டம். தனிமை. அதுவும் முதுமை. ரெண்டும் ரொம்பவும் பாடாப் படுத்தும். பேசாமல் நம்ம கூடவே வைச்சுட்டால்...''

ஜனார்த்தனன் புரிந்து கொண்டான். பேசவில்லை.

''என்னங்க யோசனை? கேட்டது தப்புங்களா...?''

## இவர் கோபப்பட்டது ஏன்?



**எ**லிஸபெத் டெய்லர் ஒரு கட்டடத் தொழிலாளியை சமீபத்தில் மறுமணம் செய்த கொண்டதும், ஓர் அப்பாவி பத்திரிகை நிருபர் அவரை அணுகி, ''தங்களுடைய இந்தப் பத்தாவது கணவரை முதலில் எங்கு சந்தித்தீர்கள்? எப்படிக் காதல் அரும்பியது?'' என்று கேட்டார். எலிஸபெத், ''உங்கள் பத்திரிகை மீது அவதூறு வழக்குத் தொடர்வேன். அவர் என்னுடைய எட்டாவது கணவர்தான். பத்தாவது என்று நீங்கள் எப்படிச் சொல்லலாம்?'' என்று பாய்ந்தார் கோபமாக!

- அ. ஷண்முகசுந்தரம்.

''தப்பு இல்லை. நான் சொன்னால் போதாது. அம்மாகிட்ட கேட்கணும். அம்மாதான் முடிவு பண்ணணும்...''

''கேளுங்களேன்.. நானே கேட்கட்டுமா...?''

''இல்லை. நானே கேட்கிறேன்...''

எப்பொழுது இந்த விஷயத்தைத் தாயும் மகளும் அலசினார்கள் எனத் தெரியாது. ஆனால் அப்பாவும் மகளும் இல்லாத தனிமையில் பேசியிருக்கிறார்கள். காலையில் டிபன் சாப்பிடும் போது பார்வதி ஆறுதலான யோசனை சொல்வது போல் கூறினாள்.

''சம்பந்தி நீங்க தப்புப் பண்ணிட்டீங்க. மூணு பொண்ணுகளோட திருமணங்களும் முடிஞ்ச நிலையில நீங்க இதை யோசனை செய்யறது உங்களோட பிழை...''

அனைவருமே பார்வதியின் பேச்சை அரை வாயோடு நிமிர்ந்து பார்த்தனர். பிரேமா உன்னிப்பாய்க் கவனித்தாள். ஜனார்த்தனன் சம்பந்தமே இல்லாதவன் போல் எங்கோ நோக்கினான். சங்கரன் தலையைக் குனிந்து ஒரே இட்லியை மீண்டும்... மீண்டும் நசுக்கினார்.

''எங்களோட இருக்கறது எங்களுக்குக் கஷ்டம் இல்லை. ஆனால் பழகப் பழக பாலும் புளிக்கும். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு. இருங்க... ஒரு வாரம் இருங்க. ஒரு மாசம் இருங்க... நல்லாக் கவனிப்போம். கடைசிக் காலமே இங்கே தான்னு முடிவு பண்ணிட்டோம்னா சம்பந்தி சம்பந்தியாவே இருக்கறது அப்போ மாற வேண்டி வரும்...''

''என்ன சொல்றீங்க... மாமி... அப்பாவோட நிலைமையைப் பார்க்கணும்...'' அடக்க முடியாமல் பேசினாள் பிரேமா.

''நீ அக்கறை காட்டுவது போல... உங்க அக்கா ரெண்டு பேரும் அக்கறை காட்ட வேண்டாமா?''

''அவங்க... போகட்டுமே... அதுக்குத் தண்டனை கிடைச்சால் வாங்கிட்டுப் போறாங்க....''

''அப்போ... நாம மட்டும் இளிச்ச வாயன் வகையில வர்றோம்னு ஊர் பேசுமே...''

''இதுக்கும் ஊருக்கும் சம்பந்தமே இல்லை.. மாமி..''

''என்னால... காலம் பூரா அவர் இங்கே இருக்கறது ஒத்துக் கொள்ளக்கூடியது அல்ல. அப்புறம் உன் புருஷனோட பேசிக்க...'' அனைவரும் கை கழுவினார்கள்.

ஜனார்த்தனன் அலுவலகம் போக

பேண்ட், ஷர்ட் மாட்டிக் கொண்டு, ஷூவின் லேஸை நெம்பிக் கொண்டே சங்கரனிடம் பேசினான். ஸோபாவில் யோசனை வயப்பட்டவளாய் பிரேமா. போராடலாமா என மனதிற்குள் குழப்பம் இருந்தது.

''மாமா... நாமெல்லாம் மனுஷங்க. திட்டமிட்ட வாழ்க்கை வாழற சாதாரணப் பிராணிகள். அம்மா உங்களை ஒரு வார்த்தை பேசிட்டால்... சுடும். உங்க சொந்த மகன் பேசறதை விட, நான் பேசறது பயங்கரமாப் படும். மனம் வருந்தும். அம்மாவும் ஏதாவது பேசிட்டால்... சங்கடமாயிடும்...''

''வேண்டாம் மாப்ளை. விட்டுடுவோம். இப்படி பண்ணலாமான்னு உங்ககிட்டே கேட்டோம். ஒரு ஐடியா கேட்டோம். நான் வள்ளியூர்லயே இருந்துடறேன்.''

''மாமா... எல்லாப் பணத்தையும் செலவழிச்சுப் பொண்ணுகளைக் கட்டிக் கொடுத்திருக்கக் கூடாது. உங்களுக்கென்று கொஞ்சம் வெச்சிருந்திருக்கணும்...''

''இப்ப பணமா பிரச்னை... தனிமை. தனிமையா என்ன பண்ணுவோம்னு பயம் இருக்குதே... அதைப் போக்கணும்.'' பிரேமா கோபமாகச் சொன்னாள்.

''பணம் இருந்திருந்தால்... தனிமை இருக்காது. ஆள் வரும். உனக்குப் புரியலை...'' அவன் ரேழி தாண்டித் தெருவில் நடந்து.. பஸ்ஸை இலக்காக்கினான்.

**ஜ**னார்த்தனன் அலுவலகம் போன பின், பார்வதி எங்கோ பை எடுத்துக் கொண்டு சொல்லாமல் கொள்ளாமல் போய் விட, சங்கரன் யோசித்தார். சங்கரனின் மனம் மருமகன் சொன்ன வார்த்தைகளையே அசைபோட்டது. பணம் அனைத்தையும் கொடுத்து விட்டு ஆண்டியாய் இருப்பதனால்தான்... நான் தனிமையாக்கப் பட்டேனா? பணம் என்னிடம் இருந்திருந்தால்... யார் என் துணைக்கு வருவார்கள்? மூன்று மகள்களும் வருவார்களா..? பம்பாயிலிருந்தும், பெங்களூரிலிருந்தும் எங்களோடு வந்திருங்கள். எங்களோடு வந்திருங்கள்' என அழைப்பு வருமா? உன்னிடம் ஒன்றுமில்லை. உன்னைக் கூட்டி வைத்து என்ன செய்வது என எண்ணி எடுத்த முடிவா? சங்கரன் குழம்பினார். பிரேமாவைப் பார்த்தார்.

''பிரேமா.. நான் சாயந்தரம் போறேன். இருட்டறதுக்குள்ள வள்ளியூர் போயிடறேன்...''

''அப்பா... நானும் வந்துடறேன்...''

''எங்கே...?''

''எனக்குக் கல்யாணமே நடக்கலை. அப்படி இருக்கட்டும். உங்க காலம் முடிஞ்ச இங்கே வர்றேன். நீங்க தனியா இருந்தால் ஓட்டல் சாப்பாடும்... கோரைப்பாய்ச் சயனமும்தான் சுகம்னு உடம்பை வருத்திக்கிட்டு அலைவீங்க. அதை நினைக்கறச்சே... வயிறு புரளுது... நான் வந்துடறேன்...'' முந்தானை எடுத்து வாய் பொத்தி அழுதாள்.

''சின்னக் குழந்தை மாதிரி பேசாதே பிரேமா... எனக்கு என்ன... நான் எவ்வளவு சுகம் கண்டேன்னு உனக்குத் தெரியுமா? உன் கல்யாணம் முடிஞ்ச அன்னிக்கு என் மேல் ஏழுலுலகத் தேவர்களும் பூமாரி பொழிஞ்ச மாதிரி சந்தோஷம் தெரியுமா... ஏதோ ஒரு பெரிய மலையைப் பெயர்த்து விட்ட சந்தோஷம்... அதுவா தப்பு.. அதையா உதறிட்டு வர்றதாச் சொல்றே... அப்படி வந்தா அது எப்படிம்மா எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்க முடியும்?'' பிரேமாவுக்கு விளங்க வைத்தார்.

மாலையில் பஸ் பிடித்து ஏறிக் கை காட்டி விட்டு வள்ளியூர் வந்தார்.

ஆயினும் மூன்று பேரில் ஒருத்தியாவது தன்னுடன் வந்து இருக்கும்படி தம்மை வந்து அழைக்க மாட்டாளா என அவர் மனம் மீண்டும் மீண்டும் எண்ணிக் கொண்டேயிருந்தது.




❑ கேரளாவிலுள்ள கோவில்களில் தினசரி வருவாகும் காணிக்கைத் தொகை பெரும்பாலும் சில்லறை நாணயங்களாக உள்ளன. இவை தனலக்ஷ்மி பாங்கில் டெபாசிட்டுகளாக மாறுகின்றன. இதனால் இந்த பாங்கில் ஏகப்பட்ட சில்லறை சேர்ந்து விட்டது. இதை என்ன செய்வது? இதைச் செலவழிக்க, மற்ற வங்கிகளில் வேலை செய்வோருக்குத் தனிப்பட்ட கடன் உதவி என அறிவித்தது. இவர்கள் தங்கள் வருமானம் பற்றிய சான்றிதழ் ஒன்றும் இரண்டு சக ஊழியர்களின் கையெழுத்து மட்டும் வாங்கி வந்தால் போதும். உடனே கை மேல் கடன் கிடைக்கும்! ஆனால் இந்தக் கடன் சில்லறை நாணயங்களாகத்தான் கொடுக்கப்படும்!

நன்றி : பிஸினஸ் இண்டியா

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்.

நான் ஒரு தனியார் கம்பெனியில் வேலை செய்து கொண்டிருக்கிறேன். பள்ளியில் தமிழ் மீடியத்தில் படித்த தனால் இங்கிலீஷ் கிராமர் என்றால் எனக்கு கொஞ்சம் அலர்ஜி.

ஒவ்வொரு வருடமும் பரீட்சைக்குத் தேவையான இங்கிலீஷ் சம்மரிகளைப் படித்து, மனப்பாடம் செய்து, பரீட்சை ஆண்டில் எப்படியோ பாஸ் செய்து விட்டேன். ஆனால்...



# நாடி வந்த நல் வாய்ப்பு!..

படிப்பை முடித்து விட்டு, வேலைக்குச் சென்றபோதுதான் ஆங்கிலத்தின் அவசியத்தை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

எங்களது ஹெட் ஆபீஸிலிருந்து வரும் அதிகாரிகள் ஆங்கிலத்தில் கேட்கும் கேள்விகளுக்கு ஆங்கிலத்தில் பதில் பேச முடிய்வில்லையே என்று பல சமயங்களில் வேதனைப்பட்ட துண்டு.

மேலும் அலுவலகத் தொடர்பான கடிதங்கள் எழுத அடுத்தவர்களது உதவியை நாடும் போது, இத்தனை வருஷம் சர்வீஸ் ஆகிறது இது கூடத் தெரியவில்லையே" என்று அவர்கள் ஏளனமாகப் பேசுவதைக் கேட்கும் போது, எனக்கு அழுகையே வந்துவிடும்.

என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது அதிர்ஷ்டவசமாக விவேகானந்தா கல்வி நிலையத்தின் விளம்பரம் கண்ணில் பட்டது.

இது என்னை நாடி வந்துள்ள நல்ல வாய்ப்பு என்ற நம்பிக்கையுடன் விவேகானந்தா கல்வி நிலையம் நடத்தும் தபால் முறைப் பயிற்சியில் சேர்ந்தேன். என் நம்பிக்கை வீண் போகவில்லை. ஆம்...

ஆங்கில இலக்கணத்தை அனைவருக்கும் புரியும் வகையில் அறிமுகப்படுத்தி, வாக்கியங்களை அமைக்கும் முறை பற்றி எளிய முறையில் சொல்லிக் கொடுத்து, தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச பல பயிற்சிகளைத் தொகுத்து வழங்கி, ஓர் ஆசிரியர் நம்மிடம் நேரில் உரையாடுவதைப் போல பயிற்சி முறை மிகவும் எளிய முறையில் அமைக்கபபட்டுள்ளது.

ஆர்வமுடன் இப்பயிற்சியை மேற்கொண்டதன் பலனாய் இப்பொழுது என்னால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடிகிறது. இலக்கணப் பிழை ஏற்பட்டு விடுமோ என்ற பயமின்றி கடிதங்கள் எழுத முடிகிறது.

மிகக் குறுகிய காலத்தில் என்னை ஆங்கில மொழியில் புலமை பெறச் செய்த விவேகானந்தா கல்வி நிலையத்திற்கு நான் என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன்.

Mrs. S. விசாலாட்சி

---

நீங்களும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலப் பயிற்சி பெறலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு.

விவரங்களுக்கு கீழ்க்கண்ட முகவரியில் உடனே தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**தபால் பெட்டி எண்: 4986**
**9, நடேசன் தெரு, தி. நகர்,**
**சென்னை-600 017.**

NAGA

# சிவகாமியின் சபதம்



## பதினான்காம் அத்தியாயம்

## ''வாழி நீ மயிலே!''

ஆயனரும் சிவகாமியும் அந்த விஸ்தாரமான சபா மண்டபத்துக்குள் பிரவேசித்த போது மண்டபத்தில் வீற்றிருந்தவர்கள் அத்தனை பேருடைய கண்களும் அவர்கள் மீது சென்றன. அளவில்லா வியப்பும் குதூகலமும் ஆவலும் அந்த ஈராயிரம் கண்களிலேயும் ததும்பின.

சபையில் அப்போது வீற்றிருந்தவர்களில் ஒருசிலர் ஒன்றரை வருஷத்துக்கு முன்னாலே அதே மண்டபத்தில் நடந்த சிவகாமியின் அரங்கேற்றத்தின் போது அங்கே பிரசன்னமாயிருந்தவர்கள்; மற்றும் அநேகர் அந்த அரங்கேற்றத்தைப் பற்றிக் கேள்வியுற்றிருந்தவர்கள். சிவகாமியின் அரங்கேற்றம் அந்த மண்டபத்தில் நடந்து கொண்டிருந்த சமயத்திலேதான் முதன் முதலில் புலிகேசியின் படையெடுப்பைப் பற்றி செய்தி கிடைத்ததென்பதையும், அதனால் அரங்கேற்றம் தடைப்பட்டதென்பதையும், அவர்கள் எல்லோரும் நினைவு கூர்ந்தார்கள். அந்தத் தடைக்குக் காரணமான புலிகேசிச் சக்கரவர்த்தி அச் சமயம் அந்தச் சபையில் வீற்றிருக்கும் அதிசயத்தை எண்ணிய போது அவர்கள் எல்லாருடைய கண்களும் மாறி மாறிச் சிவகாமியையும் புலிகேசியையும் நோக்குவனவாயின.

ஆயனரும் சிவகாமியும் சபா மண்டபத்துக்குள் பிரவேசித்து வரும் காட்சியைப் பார்த்தவுடன், எல்லாரையும் போல் வாதாபி மன்னரும் சிறிது நேரம் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தார். அஜந்தா மலையின் ஆழ்ந்த குகைக்குள்ளே அவர் கண்டிருந்த அற்புத வர்ண சித்திர உருவங்களில் ஒன்றுதான் உயிர் பெற்று எழுந்து தம் கண் முன்னால் நடந்து வருகிறதோ என்று அவருக்குத் தோன்றிற்று. சௌந்தரியவதிகளான எத்தனையோ பெண்களை அவர் பார்த்ததுண்டு. ஆனால், இம் மாதிரி நடையழகு வாய்ந்த பெண்களைப் பார்த்தது கிடையாது. சிவகாமி நடந்து வந்த போது அவளுடைய பாதங்கள் பூமியில் பட்டனவோ படவில்லையோ என்று தெரியாதபடி நடந்தாள். சங்கீதக் கலையின் உயிர்த் தத்துவத்தை உணர்ந்து புலவன் பாடும் போது இசை எப்படி ஒவ்வொரு ஸ்வரமும் தனித்தனியாகவும் அதே சமயத்தில் ஒன்றோடொன்று இழைந்தும் கேட்கப்படுகிறதோ, அது போல் சிவகாமி நடந்த போது,அவள் அடிகள் எடுத்து வைக்கிறாளோ அல்லது பூமிதான் அவளுடைய பாதங்களுக்குக் கீழே நழுவிச் சென்று கொண்டிருக்கிறதோ என்று தோன்றியது. சபா மண்டபத்திலிருந்த அத்தனை பேருடைய கண்களுக்கும் சிந்தனைக்கும் வேலை கொடுத்துக் கொண்டு பிரவேசித்த சிவகாமியோ, அவ்விதம் எல்லோருடைய கவனத்துக்கும் கண் நோக்குக்கும் தான் ஆளாகியிருப்பதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. உயர் குலத்துப் பெண்டிருக்குரிய இயற்கையான நாணத்தினால் சிறிதளவு தலைகுனிந்த வண்ணம் அவள் நடந்து வந்தாள். அவளுடைய உள்ளத்தில் அல்லும் பகலும் குடிகொண்டிருந்த கம்பீர முகத்துக்குரியவர் அந்தச் சபையில் எங்கே இருக்கிறார் என்று தெரிந்து கொள்ள அவளுக்கு அளவற்ற ஆவல் இருந்தது. எனினும், அந்த ஆவலைப் பெருமுயற்சி செய்து அவள் அடக்கிக் கொண்டு இயல்பாக எதிரே பார்த்துக் கொண்டு நடந்தாள்.

இரண்டு சக்கரவர்த்திகளும் வீற்றிருந்த இடத்துக்கு அருகில் வந்ததும், ஆயனர் கும்பிட்டு நிற்க, சிவகாமி நமஸ்கரித்து நின்றாள்.

மகேந்திர பல்லவர், ''ஆயனரே! உமது

புதல்வி சிவகாமியின் நாட்டியக் கலைத் திறமையின் புகழானது நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவி வாதாபிச் சக்கரவர்த்தியின் காதுவரையில் எட்டியிருக்கிறது. இதோ இன்று நமது அருமைச் சிநேகிதராக வீற்றிருக்கும் சத்யாச்ரய புலிகேசி மன்னர் சிவகாமியின் நடனத்தைப் பார்க்க விரும்புகிறார். அதற்காகவே உங்களை இவ்வளவு அவசரமாகக் கூட்டி வரச் செய்தேன். சிவகாமியினால் இப்போது உடனே நடனம் ஆட முடியுமா? உம்முடைய விருப்பம் என்ன?'' என்று வினாவிய போது, ஆயனர், ''மகாப் பிரபு! தங்களுடைய கட்டளை எதுவோ, அதுதான் என்னுடைய விருப்பம். சிவகாமிக்கு, அவளுடைய கலைத் திறமையைக் காட்டுவதற்கு இதைக் காட்டிலும் சிறந்த சபையும் சந்தர்ப்பமும் எங்கே கிடைக்கப் போகிறது? இரண்டு மாபெருஞ் சக்கரவர்த்திகளும் இரண்டு சூரியர்களைப் போலவும் இரண்டு தேவேந்திரர்களைப் போலவும் ஏக காலத்தில் கூடியிருக்கிறீர்கள்!'' என்று சொல்லி விட்டுச் சிவகாமியை நோக்கினார்.

முதலில் மகேந்திர பல்லவர் பேசிய போது, சிவகாமி சிறிது தலைநிமிர்ந்து அரைக்கண்ணால் வாதாபிச் சக்கரவர்த்தியைப் பார்த்தாள். பிறகு, அவளுடைய கண்கள் கட்டுக்காவல்களை உடைத்துக் கொண்டு, இரண்டு சக்கரவர்த்திகளின் சிம்மாசனங்களையும் சுற்றிச் சிறிது தூரத்துக்கு வட்டமிட்டன. ஆனால் அவை அடைந்தது ஏமாற்றந்தான். சிவகாமியின் கண்கள் தேடிய வீர சௌந்தரிய வதனம் அங்கே தென்படவில்லை. ''ஆ! அவர் எங்கே? ஏன் சக்கரவர்த்திக்கு அருகில் அவர் காணப்படவில்லை?'' என்று அவளுடைய உள்ளம் பதைபதைத்தது. சில கண நேரத்திற்குள் பற்பல எண்ணங்கள் மின்னலைப் போல் தோன்றி மறைந்தன. ஏதாவது அவருக்கு விபத்து நேர்ந்திருக்குமோ? இராது, இராது, இராது. அப்படி இருந்தால், மகேந்திர பல்லவர் இந்த வைபவத்தை நடத்துவாரா?

''மிக்க சந்தோஷம் ஆயனரே! அதோ வாத்தியக் கோஷ்டியும் ஆயத்தமாயிருக்கிறது. உங்களுக்காகவே இந்தச் சபையை இவ்வளவு நேரம் வளர்த்திக் கொண்டிருந்தோம்!'' என்றார் மகேந்திர பல்லவர்.

சிவகாமி தான் நின்ற இடத்திலிருந்து நடன வட்டத்துக்குப் போகத் திரும்பிய போது, மீண்டும் அவளுடைய கண்கள் ஒருமுறை சுற்றிச் சுழன்றன. அப்போது அவளுடைய பார்வை தற்செயலாகப் புலிகேசியின் முகத்தில் விழுந்தது. வெறித்து நோக்கிய புலிகேசியின் கொடுங்கண்களைச் சந்தித்த போது திடீரென்று வீசிய வாடைக் காற்றில் அடிபட்ட மல்லிகைக் கொடியைப் போல அவளுடைய உள்ளம், உடம்பு எல்லாம் சில்லிட்டு நடுநடுங்கின. இது ஒரு விநாடி நேரந்தான். அகாரணமாகத் தோன்றிய அந்த உணர்ச்சியை எப்படியோ சிவகாமி சமாளித்துக் கொண்டு நடன வட்டத்தை நோக்கி நடந்தாள். அப்போது இன்னதென்று சொல்ல முடியாத அருவமான நிழல் போன்ற ஞாபகம் ஒன்று அவளைப் பின்தொடர்ந்து சென்றது.

நடன வட்டத்தில் சென்று நின்றதும் சிவகாமி மேற்கூறிய நிழல் ஞாபகத்தை உதறித் தள்ளிவிட்டு ஆட்டத்துக்கு ஆயத்தமானாள். அப்போது அவள் தன்னடக்கத்துக்குப் பங்கமில்லாமல் அந்த மகாசபையின் நாலாபுறத்திலும் கண்ணைச் சுழற்றிப் பார்த்தல் சாத்தியமாயிருந்தது. மண்டபத்தின் மேல் மச்சு - மாடங்களிலே சக்கரவர்த்தினியும் மற்ற அந்தப்புரத்து மாதர்களும் வீற்றிருப்பது அவள் பார்வைக்குப் புலனாயிற்று. முன்னொரு நாள் அதே மண்டபத்தில் நடந்த அரங்கேற்றத்தின் போது இன்று போலவே மாமல்லரைக் காணாமல் முதலில் தான் ஏமாற்றமடைந்ததும், பிற்பாடு அவர் தாய்மார்களுடன் மேல் மாடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்ததாகத் தெரியப்படுத்தியதும் நினைவு வந்தன. இன்றைக்கும் அவர் அவ்வாறே தன் கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு மறைவான இடத்திலிருந்து தன்னுடைய நடனத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. இந்த எண்ணம் ஏற்பட்டதும் இதற்கு முன் அவளுக்கு ஏற்பட்டிருந்த ஏமாற்றம், சோர்வு, மனக் கலக்கம், நடுக்கம் எல்லாம் மாயமாய் மறைந்து போயின. நடனமும் உடனே ஆரம்பமாயிற்று.

நடனம் ஆரம்பமாகிச் சிறிது நேரத்துக்கெல்லாம் அச் சபையில் இருந்தவர்கள் எல்லாம், அது ஒரு இராஜ சபை என்பதையும், அதில் ஒரு பெண் நடனமாடுகிறாள் என்பதையும், தாங்கள் அங்கேயிருந்து அதைப் பார்க்கிறோம் என்பதையும் மறந்தே போனார்கள். இந்த ஜட உலகத்தையே விட்டு விட்டு அனைவரும் ஒரு புதிய

அமரர் கல்கி

ஆனந்தக் கனவுலகத்துக்கே போய் விட்டார்கள்.

நடனம் ஆரம்பமாகும் சமயத்தில் சிவகாமி தெளிந்த தன்னுணர்ச்சி பெற்றிருந்தாள். தன் வாழ்க்கையிலேயே அது ஒரு முக்கியமான தினம் என்றும், அன்று தான்



ஆடப் போகும் நடனம் தன் வாழ்க்கையில் ஒரு முக்கிய சம்பவம் என்றும் உணர்ந்திருந்தாள்.

கன்னி சிவகாமியின் உள்ளத்தில் அலை மோதிக் கொண்டிருந்த இரு பேருணர்ச்சிகளில் ஒன்று மாமல்லர் மேல் கொண்ட காதல் என்பதையும், இன்னொன்று நடனக் கலை மீது அவளுக்கிருந்த பிரேமை என்பதையும் முன்னமே பார்த்திருக்கிறோம்.

இப்போது இங்கே கூடியிருப்பது போன்ற ஒரு மகா சபை தனது கலைத் திறமையைக் காட்டுவதற்குக் கிடைப்பது மிகவும் அரிது என்பதை ஆயனரைப் போல் அவளும் உணர்ந்திருந்தாள்.

அன்றியும் சிவகாமிக்குத் தன்னுடைய கலைத் திறமை முழுவதையும் அந்தச் சபையில் காட்ட வேண்டுமென்ற ஊக்கம் ஏற்படுவதற்கு இன்னொரு முக்கிய காரணமும் இருந்தது.

மகேந்திர பல்லவர் மற்ற விஷயங்களில் எவ்வளவு கடின சித்தராயிருந்தபோதிலும், கலைகளுக்கு மனம் உருகக் கூடியவர். தன் கலைத் திறமையினால் அவருடைய நன்

மதிப்பைக் கவர வேண்டும்; தான் மாமல் லரை மணந்து கொள்வதற்கு அவர் தடை சொல்லாதபடி செய்ய வேண்டும். வயிர நெஞ்சமுள்ள ஒரு மகா சக்கரவர்த்தியின் மனத்தை மாற்றித் தன் விருப்பத்துக்கிணங் கும்படி செய்வதற்குத் தன்னிடம் உள்ள ஒரே ஆயுதம் நடனக் கலையே யல்லவா?

எனவே, அன்றைக்குத் தன்னுடைய நடனம் பரத நாட்டியத்தின் சரித்திரத்தி லேயே ஓர் அற்புத சம்பவமாயிருக்க வேண்டுமென்று சிவகாமி சங்கற்பம் செய்து கொண்டாள்.

ஆனால் இத்தகைய தன்னுணர்ச்சியெல் லாம், சிவகாமி ஆட்டத்தைத் தொடங்கும் வரையிலேதான் இருந்தது. ஆட்டம் ஆரம்ப மாயிற்றோ, இல்லையோ, இத்தனை கால மும் சிவகாமியின் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த கலை உணர்ச்சியானது பொங்கிப் பெருகத் தொடங்கியது. சிவகாமி தான் என்னும் உணர்ச்சி அற்றுக் கலை வடிவ மாகவே மாறி விட்டாள்.

பின்னர் சிவகாமி நடனம் ஆடவில்லை; நடனக்கலையானது அவளை ஆட்கொண்டு ஆட்டுவித்தது.

சிவகாமியின் உள்ளமானது நாட்டியக் கலையின் அம்சங்களாகிற தாளங்களையும், ஜதிகளையும், அடைவுகளையும், தீர்மானங் களையும் பற்றி எண்ணவில்லை. அந்தத் தாளங்கள், ஜதிகள், அடைவுகள், தீர்மா னங்கள் எல்லாம், அவை அவை அந்தந்த இடத்தில் ஓடி வந்து சிவகாமிக்குச் சேவை செய்தன.

சிவகாமியின் உள்ளம் ஆனந்த வெளியிலே மிதந்து கொண்டிருந்தது. அவ ளுடைய தேகமோ எல்லையற்ற ஆனந்த வெள்ளத்திலே அனாயாசமாக மிதந்து கொண்டிருந்தது.

பார்த்துக் கொண்டிருந்த சபையோர் களும் ஆனந்த சாகரத்தில் மிதக்கலாயினர். பரத நாட்டிய வினிகையில் முதற் பகுதியான 'நிருத்தம்' முடிவடைந்த போதுதான் சபை யோர் தாங்கள் சஞ்சரித்த ஆனந்தக் கனவு லோகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்தனர்.

அப்போது சபையின் நானா புறங்களி



லிருந்தும் பிரமாதமான கரகோஷம் எழுந்தது. அவ்விதம் கரகோஷம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தவர்கள் இரு சக்கரவர்த்திகளும் கூடத்தான்.

**ந**டனம் ஆரம்பிப்பதற்கு முன்னால், சிவகாமியும் ஆயனரும் மகேந்திர சக்கரவர்த்தியிடம் கட்டளை பெற்றுக் கொண்டு நடன வட்டத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த போது, வாதாபி மன்னர் மகேந்திர பல்லவரைப் பார்த்து, ''இதென்ன? இவர்களுக்கு இவ்வளவு மரியாதை செய்கிறீர்களே? எங்கள் நாட்டிலே சாட்டையினால் அடித்து நடனம் ஆடச் சொல்வோம்!'' என்றார்.

''சத்யாச்ரயா! எங்கள் நாட்டில் அப்படியில்லை. இங்கே கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் நாங்கள் மிக்க மரியாதை செய்கிறோம். இராஜ்யம் ஆளும் மன்னர்களையும் சக்கரவர்த்திகளையும் போலவே கலை உலகிலும் இங்கே அரசர்களும் சக்கரவர்த்திகளும் உண்டு. 'சிற்ப சக்கரவர்த்தி', 'கவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டங்கள் அளிக்கிறோம். ஆயனர் **'சிற்ப சக்கரவர்த்தி'** என்ற பட்டம் பெற்றவர். இராஜ்யம் ஆளும் சக்கரவர்த்திகளுக்குச் செய்யும் மரியாதையை மக்கள் இவருக்கும் செய்கிறார்கள்'' என்றார்.

''அழகாய்த் தானிருக்கிறது உங்கள் நாட்டின் வழக்கம்!'' என்று பரிகசித்தார் வாதாபி மன்னர்.

சிவகாமியின் நிருத்தம் முடிந்தவுடனே வாதாபிச் சக்கரவர்த்தியும் மற்றவர்களைப் போல் கரகோஷத்தில் ஈடுபட்டதைக் கண்ட மகேந்திர பல்லவர், ''இப்போது என்ன சொல்கிறீர்கள்? கலைஞர்களுக்கு மரியாதை செய்வது பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டீர்களா?'' என்று கேட்டார்.

''நடனம் அற்புதமாய்த்தானிருக்கிறது. இம் மாதிரி நான் பார்த்ததேயில்லை. ஆனாலும்....'' என்று கூறி இடையில் நிறுத்தி விட்டுப் புலிகேசி ஏதோ யோசனையில் ஆழ்ந்தார்.

**அ**ன்று அபிநயத்துக்குச் சிவகாமி முதன் முதலாக எடுத்துக் கொண்ட பாடல் செந்தமிழ் நாட்டின் ஆதிதேவதையான வேலனைப் பற்றியது.

வேலன் தன்னிடம் பக்தி கொண்ட பெண்ணுக்கு, ''நான் திரும்ப வந்து உன்னை ஆட்கொள்கிறேன்!'' என்று வேலின் மீது ஆணையிட்டு வாக்களித்திருக்கிறான். ஆனால் அவ் வாக்குறுதியை அவன் நிறைவேற்றவில்லை. அதனால் அந்தப் பெண் ஏமாற்றமும் மனத் துயரமும் அடைகிறாள். அந்த நிலைமையிலும் வேலனிடத்திலே கோபங்கொள்ளவோ, அவன் மீது குறை சொல்லவோ அவளுக்கு விருப்பமில்லை. எனவே, குற்றத்தையெல்லாம் வேலனுடைய வாகனமாகிய மயிலின் மீது போடுகிறாள். மயிலை நிந்திக்கிறாள்; கோபிக்கிறாள்; பலவிதமாகவும் இடித்துக் காட்டுகிறாள். இந்தக் காலத்தில், 'ஆனந்த பைரவி' என்றும் வழங்கும் பழமையான ராகத்தில், நடனத்துக்கும் அபிநயத்துக்கும் ஏற்ற தாளத்துடன் அமைந்த பாடல் பின் வருமாறு :

**மறவேன் மறவே னென்று**
**வேலின்மேல் ஆணையிட்ட**
**மன்னரும் மறப்பாரோ**
**- நீல மயிலே! (மற)**
**உருகி உருகி உள்ளம்**
**அவரை நினைவதையும்**
**உயிரும் கரைவதையும்**
**- அறியாரோ மயிலே? (மற)**
**அன்பர் வரவு நோக்கி**
**இங்குநான் காத்திருக்க**
**அன்னநடை பயில்வாயோ**
**- வண்ண மயிலே!**
**பெம்மான் உன் மேலே**
**வரும் பெருமிதம் தலைக்கேறிப்**
**பாதையை மறந்தாயோ**
**- பேதை மயிலே!**
**வன்மம் மனதில் கொண்டு**
**வஞ்சம் தீர்க்க நினைந்து**



**''மைசூர் பாகு செய்யறதுக்காக நீங்க வாங்கிண்டு வந்த பாத்திரம் சரியில்லே.**

**''ஏன்?''**

**''மைசூர்பாகைக் கெட்டியாப் பிடிச்சுண்டு விடவே மாட்டேங்கிறது, பாருங்க!''**

**- ஆலத்தம்பாடி ராஜகோபால்.**

# அருள்வாக்கு



உலகத்தில் நாம் காண்கிற அன்பை மூன்று வகையாகப் பிரிக்கலாம். மகான்கள், யோக்கியர்கள், சத்திய சந்தர்கள், பரோபகாரிகள், ஞானிகள், அநுக்கிரக சக்தி வாய்ந்த உத்தமர்கள் ஆகியோரிடம் அவர்களது குணத்துக்காக அன்பு ஏற்படுகிறது. பந்துக்களுடனும், சிநேகிதர்களுடனும் சேர்ந்து பழகுவதால் அவர்களிடம் ஒருவித அன்பு உண்டாகிறது. மூன்றாவது, ஒரு காரியத்துக்காக, லாபத்துக்காகச் சிலரிடம் அன்பு வைக்கிறோம். உதாரணமாக வியாபாரத்தில் சகாயம் செய்வார் என்பதற்காக ஒரு தனிகரிடம் அன்பு பாராட்டுகிறோம்; சம்பளம் கொடுக்கிறார் என்பதால் யஜமானரிடம் அன்பாக இருக்கிறோம்.

இந்த மூவகை அன்பும் உண்மையானதல்ல; சாசுவதமானதல்ல. யஜமானர், ''நீ போய் விடு'' என்றால், உடனேயே நம் அன்பும் போய் விடும். பழகினவர்கள் தூர தேசம் போனாலோ, காலகதி அடைந்தாலோ, வேறுவிதத்தில் அவர்களுடன் பழக்கம் போய் விட்டாலோ நாளடைவில் அன்பும் போய் விடுகிறது. முதலில் பிரிவின் போது அழுத அழுகை, அப்புறம் எப்படியோ மறைந்து விடுகிறது. உண்மையான அன்பானால், அந்த அழுகை என்றைக்கும் அப்படியேதானே இருக்க வேண்டும்? உத்தம புருஷர்களான மகான்களிடம் வைக்கும் அன்பு கூட நிரந்தரமில்லைதான். மகானிடம் உத்தம குணம் குறைந்தால் -அல்லது குறைந்ததாக நமக்குத் தோன்றினாலே போதும் - அவரிடம் வைத்த அன்பும் குறைந்து விடுகிறது.

மூவகை அன்பும் காரணத்தால் ஏற்பட்டது. எனவேதான் அவை நிரந்தரமாக இருக்கவில்லை. உத்தம புருஷர்களிடமும் இன்ன குணம் இருக்கிறது என்பதால், அந்தக் குணத்தைக் காரணமாகக் கொண்டே அன்பு வைக்கிறோம். அதோடு அவர்கள் நம்மை உத்தாரணம் செய்வார்கள் (உய்விப்பார்கள்) என்ற சுய காரியமும் உள்ளூர இருக்கவே செய்யும்.

இப்படியெல்லாம் எக் காரணமும் வியாஜமும் இன்றிப் பிரியமாக இருப்பதுதான் உண்மை அன்பு. ஒருவர் நம்மிடம் நெருங்கிப் பழகா விட்டாலும் சரி, அவருக்கு ஆத்ம குணங்களும் அநுக்கிரக சக்தியும் இல்லாவிட்டாலும் சரி, அவரால் நமக்கு எந்தக் காரியமும் ஆகா விட்டாலும் சரி - அப்போதும் நாம் அவரிடம் மாறாத அன்பு வைத்தால் அதுவே உண்மையான அன்பு.

அப்படிப்பட்ட அன்பு யாருக்காவது இருக்கிறதா? ஒரே ஒருவருக்கு இருக்கிறது. ஸ்வாமிதான் அந்த ஒரே ஒருவர்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

*வழியில் உறங்கினாயோ*
*- வாழி நீ மயிலே! (மற)*
*தன்னிகரில்லாதான் தனயர்பால்*
*மையல் கொண்ட*
*மங்கையீ திரங்காயோ*
*- தங்க மயிலே!*
*சொன்னாலும் நீ அறியாய்*
*சொந்த அறிவுமில்லாய்*
*உன்னை தொந் தாவதென்ன?*
*- வன்கண் மயிலே!*
*மன்னும் கரிபரிகள் புவியில்*
*பல இருக்க*
*உன்னை ஊர்தியாய்க் கொண்டார்*
*- தன்னையே நோகவேணும் (மற)*

*(தொடரும்)*

# வளம் பெற வாருங்கள்!

## அனுபவம் மிக்கவர்களின் துணையுடன் வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வையுங்கள்.

உயரும் விலைவாசிகள், பணவீக்கம், பெருகிக் கொண்டே போகும் வங்கி வட்டி விகிதங்கள்...

சமாளிக்க வழியே இல்லையா? ஏன் இல்லை? இதோ உங்கள் முன்னே ஸ்ரீராம் சிட்ஸ். எதிர்பாராமல் ஏற்படக்கூடிய வருங்காலப் பிரச்னைகளிலிருந்து உங்களை மீட்டுக் கொள்ள ஒரு பொன்னான வாய்ப்பு.

3,50,000 பேர் பங்கு பெற்றுள்ள மகத்தான மக்கள் இயக்கம் அது. அதில் நீங்களும் ஒருவராக இடம் பெற உதவுவதற்காகவே இந்த 10 நாள் விஜயதசமி ஸ்ரீராம் விழா.

எல்லா ஸ்ரீராம் அலுவலகங்களிலும் உங்களுக்கு எதிர்பாராத பரிசுகள் காத்திருக்கின்றன. ஒவ்வொரு நாளும் போட்டிகள். ஒவ்வொரு நாளும் பரிசுகள். இந்த 10 நாட்களில் நீங்கள் வெல்லுவதற்காக மொத்தம் 1710 பரிசுகள்.

வென்றிடுவீர் பரிசுகளை. சேர்ந்திடுவீர் ஸ்ரீராம் சீட்டில். அது பல வகையான பிரச்னைகளுக்கும் தீர்வு காண உதவும் நிறுவனம்.

ரூ.75,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு பொதுத்துறை, தனியார் துறை, அரசு அல்லது அங்கீகரிக்கப்பட்டுள்ள நிறுவனங்களில் பணியாற்றும் 3 பேர் உத்திரவாதம் அளித்தாலே போதும். வேலையிலிருக்கும் பெண் சந்தாதாரர் ரூ.15,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுக்கும்போது, அவருடைய கணவருடைய உத்திரவாதமே போதுமானது.

| | சீட்டின் மதிப்பு | சந்தாதாரர் பரிசு! |
|---|---|---|
| 1. | 200 × 40 = 8,000 | டிப்ளோமட் மெலமைன் கர்ரி பௌல் |
| 2. | 250 × 40 = 10,000 | 5 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 3. | 500 × 30 = 15,000 | விட்வேர் பேக்கிங் டிஷ் |
| 4. | 625 × 40 = 25,000 | ஹால்மார்க் ஸ்டெயின்லெஸ் மல்டிபர்ப்பஸ் ஃப்ரை பான் |
| 5. | 500 × 60 = 30,000 | காஸி ரவுண்ட் மீல்ஸ் ப்ளேட் |
| 6. | 1,000 × 50 = 50,000 | காஸி ஃப்ரெஞ்ச் ஃப்ரை |
| 7. | 1,250 × 60 = 75,000 | பிரிஜ 2.5 லிட்டர் குக்கர் |
| 8. | 1,000 × 100<br>2,500 × 40 = 1,00,000 | ஹால்மார்க் ஸ்டு பான் |
| 9. | 4,000 × 50 = 2,00,000 | 25 கிராம் × 2 வெள்ளிப் பதக்கங்கள் |
| 10. | 10,000 × 30 = 3,00,000 | 2 கிராம் தங்கக் காசு |
| 11. | 20,000 × 50 = 10,00,000 | 8 கிராம் தங்கக்காசு |

* நுழைவுக்கட்டணம் தனி

# ஸ்ரீராம் சிட்ஸ் அளிக்கும் விஜயதசமி விழா!

## பரபரப்பூட்டும் போட்டிகள்! மனங்கவர் பரிசுகள்!

| அறிமுகப்படுத்துவோர் பரிசு! |
|---|
| 1. காஸி ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டிரே — 2 |
| 2. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீங் பௌல் (சிறியது) |
| 3. ஏசியன் ஃப்ரூட் ஃப்ரெஷ் பௌல் |
| 4. ஏசியன் 'மானர்க்' வாட்டர் ஜக் |
| 5. காஸி மில்க் டம்ளர்கள் — 2 |
| 6. காஸி ஆப்பிள் பௌல், மூடியுடன் |
| 7. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீங் பௌல் (பெரியது) |
| 8. மில்டன் கூல் கெக் — 2.5 லிட்டர் |
| 9. 20 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 10. 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 11. மில்டன் மார்க்கோபோலோ ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் வாக்கும் ஃப்ளாஸ்க் |

ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE TILL 31-10-91.

## போட்டிகளும் பரிசுகளும்

## இணைந்து வழங்குவோர்: ஸ்ரீபெட் ஜாடிகள் & பாட்டில்கள்


2

3

4

5


**சந்தாதாரர் பரிசு!**

8

6

9



7


10 11





1

2

3

4

5


**அறிமுகப்படுத்துவோர் பரிசு!**

7

6


8

9

10
11


**ஸ்ரீராம்** சிட்ஸ் &
**இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**
நிர்வாக அலுவலகம் :
"சுப்பிரமணியன் பில்டிங்",
1, கிளப் ஹவுஸ் ரோடு.
சென்னை - 600 002.
போன்: 474451/475536/470400/473932.

# கணக்குப் பிள்ளையும் கடைசி வெள்ளியும்

சகலவிதமான அணிகளையும் பூண்டு, காஞ்சிப் பட்டு தகதகக்க மங்களகரமாய்த் தரிசனம் தந்து கொண்டிருந்தாள் அம்பிகை.

செஞ்சுடர்த் தீபங்கள் ஒளிவீசின.

பொன்னம்பலம் மெய்மறந்து நின்றிருந்தார்.

அவர் மட்டுமா? அங்கிருந்தோர் அனைவருமே தான்.

ஈஸ்வர பட்டரின் ஆத்மார்த்தமான அலங்கரிப்பில், கைலாய பார்வதியே தரை இறங்கி நின்றிருந்தாள்!

பொன்னம்பலத்திற்கு ஏகமாய்த் திருப்தி. இந்த நிறைவுடன் அருகில் நின்றிருந்த கணக்குப் பிள்ளையை ஏறிட்டுப் பார்த்தார்.

'நல்லாவே ஏற்பாடு பண்ணியிருக்கீர் வேய்!' என்கிற பார்வை அது!

''பொன்னம்பலத்தோட கட்டளையா இன்னிக்கு? அபிஷேக, அலங்கார, ஆராதனை எல்லாம் பிரமாதம் போங்கோ. நைவேத்யங்கள் ஏ ஒன்'' என்று எவரோ சர்டிபிகேட் வழங்க, அது பொன்னம்பலத்தின் செவிகளை எட்டியதும் பூரித்துப் போய்விட்டார்.

கோயம்புத்தூரில் இப்போது அவரும் ஒரு முக்கியமான பிஸினஸ் புள்ளி.

ஆலயங்கள் என்றால் தாராளமாய் அள்ளிச் செலவு செய்வார். ஆனால், வேறு எந்தக் காரியமென்று போனாலும் அவரிடம் நடவாது.

இதுதான் அவரது பிறந்த மண். அதனால் இங்கு கோவில் கொண்டுள்ள அம்பிகையின் மீது அசையாத பக்தி. ஒவ்வொரு தமிழ் மாத இறுதி வெள்ளியன்றும், இவரது கட்டளையாகச் சிறப்போடு பூசனை நடைபெறவேண்டுமென்று கணக்குப் பிள்ளையிடம் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார்.

இங்கு எப்போதாவது வந்து போகிறவர், இன்றும் வந்திருக்கிறார். கடைசி வெள்ளி என்பதால் கோவிலில் கூட்டமும் அதிகம்தான்.

வெள்ளித் தாம்பாளத்தில் பிரசாதங்களை வைத்து நீட்டினார் அர்ச்சகர். விழிகளால் ஒற்றிப் பெற்றுக் கொண்டார்.

''இப்படி நீங்க அடிக்கடி வந்து சேவிச்சுண்டு போகணும். உங்களாலேதான் இந்தக் கோவில் இப்ப பிரசித்தியாயிருக்கு....'' என்றார் அர்ச்சகர்.

''இல்லே, என்னை ஒரு கருவியாக்கி, அம்பாள் பிரசித்தமாய்ட்டா. அவ்வளவுதான்'' என்றார் பொன்னம்பலம்.

அர்ச்சகர் சிரித்தார்.

''அப்ப நாங்க போய்ட்டு வர்றோம்'' என்றபடி கிளம்பினார் பொன்னம்பலம்.

''ஓ... திவ்யமாப் போய் வாங்கோ'' என்றார் அர்ச்சகர்.

பிரசாதங்கள் இருந்த கூடையைக் கணக்குப்பிள்ளை எடுத்துக் கொண்டார்.

வீட்டை நோக்கிக் கார் நகரலானது.

பரம்பரை வீடு, வயல், தோப்பு எல்லாம் இங்கே இருப்பதால், அவற்றை மேற்பார்வை பார்க்கவென்று கணக்குப் பிள்ளையை நியமித்திருந்தார். வீட்டில் கணக்குப் பிள்ளையின் குடும்பமே இருந்தது.

இவரோ, குடும்பமோ வந்து விட்டால் தங்குவதற்குத் தனி அறைகள் இருந்தன. பெரிய வீடாயிற்றே!

சாப்பாடு முடிந்தபின் பேரேடுகளை எடுத்து வந்தார் கணக்குப்பிள்ளை. ஆறு மாதக் கணக்குகளை இன்னமும் அவர் பார்த்திருக்கவில்லை.

கணக்குப்பிள்ளை மிகவும் நம்பிக்கையான நபர். அதனால்தான் கணக்குகள் பார்ப்பதில் அதிகம் அக்கறை காட்டாமல் இருந்தார் பொன்னம்பலம். எனினும் பேரேடு வந்ததால் பார்க்கலானார்.

எல்லாவற்றிலும் லாபக்கணக்கே காட்டியிருந்தார்.

இதில் பிரதானமான செலவாக கடைசி வெள்ளியன்று அம்பிகைக்கு நடத்தப் பெறும் செலவு மட்டும்தான். ஒவ்வொரு கடைசி வெள்ளிச் செலவாகவும் ரூபாய்

உமா கல்யாணி

ஐநூறுக்குக் குறையாமல் காட்டப் பெற்றிருந்தது.

இருக்கும்!

பிரமாதமான ஏற்பாடு அல்லவா! கண்ணால் கண்டது தானே! மிகவும் திருப்தியோடு பேரேட்டை நீட்டியபோது, மிகவும் பவ்யமாக அதைப் பெற்றுக் கொண்டார் கணக்குப்பிள்ளை.

''தென்னந் தோப்பிலே சிலதுக மூப்படைஞ்சிருக்கு. அதுகளை அப்புறப் படுத்திட்டு, புதுசாக் கன்னுகள் நடணும்...'' என்றார் கணக்குப்பிள்ளை.

''செய்துரும்'' என்றார் சிக்கனமாக.

''அதான் சொல்லிட்டே செய்துறலாம்ன்னு....''

''இதோ பாரும் கணக்குப்பிள்ளை, எப்பவோ நான் உமக்கு எல்லாப் பொறுப்புகளையும் தந்தாச்சு. எதெது எப்ப எப்பச் செய்யணுமோ.... செய்துற வேண்டியது தான். அதுலயும் அம்பாள் காரியம் மட்டும் ஒரு குறைவும் இல்லாம நடந்துறணும். இதுல மட்டும் தனிக் கவனம் இருக்கணும்'' என்றார் பொன்னம்பலம்.

தலையைப் பலமாக ஆட்டி ஒப்புதல் சொன்னார் கணக்குப்பிள்ளை.

திருப்தியோடு புன்னகை செய்தார் பொன்னம்பலம்.

சிறிது நேரம் பொதுவான விஷயங்களாய்ப் பேசிக் கொண்டிருந்து விட்டுக் கிளம்பினார் கணக்குப்பிள்ளை.

அவர் போனதும் பொன்னம்பலம் படுக்கையில் சாய்ந்தார்.

சிந்தனைகள் புரண்டு புரண்டு வந்தன.

அவர் புரட்டிப் பார்த்த பேரேடுகளின் ஊடே காணப் பெற்ற ஒரு துண்டுக்காகிதம் அவரை ஓய்ந்திருக்க விடவில்லை.

அது ஒரு பழைய பில். எப்படியோ பேரேட்டில் சிக்கி, இப்போது இவரது கண்ணில்பட்டு, இதுவரை அவர் மலையென நம்பிக் கொண்டிருந்த கணக்குப்பிள்ளையின் மீது.... அவரது நாணயத்தின் மீது ஐயத்தைத் தீற்றலானது.

''கவனிக்கணும்'' என்று முனகிக் கொண்டவர், உறங்க முயற்சி செய்து





''இன்னிக்குப் பார்த்துட்டு வந்த பெண்ணையாவது நம்ம பைய னுக்குப் பேசி முடிச்சிடலாங்க...''

''முடிச்சிடலாம்... ஆனா இனிமே ஞாயிற்றுக் கிழமை சாயங்கால வேளையில் ஒசியில் குடும்பத்தோட டிபன், காப்பி சாப்பிட முடியா தேன்னுதான் கவலையா இருக்கு!''

- வி. கி. குமார்.

தோற்றுப் போனார்.

''என்னங்க இது ஆச்சர்யமாய் இருக்கு! போன மாசம் தானே கடைசி வெள்ளிப் பூஜைன்னுட்டுப் போய் வந்தீங்க. அப்புறம் இன்னிக்கும் கௌம்புறீங்க!'' என்று கேட்ட வேதவல்லியின் குரலில் வியப்பு.

''என்னவோ போய்ட்டு வரணும் போல மனசுக்குள் ஓர் எண்ணம் வந்துருச்சு, அதான். காலம்பற பஸ்ல கௌம்பி வந்துரு வேன் வேதவல்லி'' என்று பதில் கூறி விட்டுப் புறப்பட்டு விட்டார் பொன்னம் பலம். காரைத் தவிர்த்துப் பஸ்ஸில் ஏறினார்.

'இப்ப நான் என்ன அம்பாள் தரிசனம் தேடியா கௌம்பியிருக்கேன்? இல்லே..., கணக்குப்பிள்ளையை வேவு பார்க்க இல்ல கௌம்பியிருக்கேன்.'

இப்படி எண்ணுவது கூட வருத்த மாகத்தான் இருந்தது. மனத்தில் போராட்ட முடன் பயணம் செய்தவர், மாலை வேளை யில் வந்து இறங்கினார்.

''வாங்க ஐயா, கணக்குப்பிள்ளை ஊர்ல இல்ல. வெளியூர் போய்ட்டாங்க...'' என்ற படி தோட்டத்து வேலைக்காரன்தான் வர வேற்றான்.

மனம் சிணுங்கிற்று.

'ஒருவேளை பூஜைக்கு ஏற்பாடு பண்ணிட்டுப் போயிருப்பார். தவிர்க்க முடி யாத வேலையாயிருக்கும்' என்று சமாதான மும் செய்து கொண்டார்.

ஃப்ரீஃப் கேஸை அறையில் வைத்து விட்டு, அப்படியே ஆற்றுத்துறைக்குப் போய் நீராடிவிட்டு வந்தார். 'பளிச்' சென்ற வெண்ணீற்றுப் பூச்சும், பட்டு வேட்டியும், பட்டு உத்தரியமுமாய் அம்பாளின் ஆலயம் நோக்கி நடந்தார்.

கடைசி வெள்ளி என்பதன் பிரத்யேக அடையாளமெதுவும் இல்லாமல் ஆலயம் இயல்பாக இருந்தது. ஏன், நிசப்தமாகக் கூட இருந்தது.

மனத்தில் வந்து உட்கார்ந்து கொண்ட வேதனையுடன், உள்ளே நுழைந்தார்.

சிவப்பு வண்ணநூல் புடைவை, ஒற்றை அரளிமாலை, வெள்ளிக்கம்பியில் கோக்கப் பெற்ற திருமாங்கல்யம், அமைதி தவழும் வதனம் எல்லாம் அந்தச் சோகையான ஒற்றை விளக்கின் ஒளியில் தென்பட்ட போது மனத்தில் நெருடல்.

ஈஸ்வர பட்டரிடம் கேட்கலாமா?

வேண்டாம். கடைசி வெள்ளி தோறும் ஐநூறு ரூபாய்க்குக் குறையாமல் செலவு பண்ணும்படி கூறியிருக்கிறார். போன மாதம் வரையிலும் அப்படி நடை பெற்ற தாகப் பேரேடு கூறுகிறது. அப்படி யானால்..... இந்தமாதம் மட்டும் தடைப் பட்டது ஏன்?

இன்று கணக்குப்பிள்ளை மட்டும் இருந்திருந்தால், இது வழக்கமானது தானா....., அல்லது தற்செயல் நிகழ்வா என்பது புரிந்து போயிருக்கும்.

அவசரப்பட்டு விட அவர் விரும்ப வில்லை.

கொட்டிய பிறகு அள்ளலாம் என்றா லும், கொட்டியது கொட்டியதுதானே! அள்ளுகிறபோதோ அருகில் கிடப்பதெல் லாம் சேர்த்து அள்ளப்படும்தானே!

மௌனமாக வீடு திரும்பி விட்டார்.

இரவு எப்போது உறங்கினார் என்பது அவருக்கே நினைவில் இல்லை.

விடியலின் போது அம்பிகையின் ஆலயத்தில் ஸுப்ரபாத இசை! அனுபவித்த படியே எழுந்து கொண்டவர், குளியல் முடித்து.... டிபன் சாப்பிட அமர்கையில் வாசலில் நிழலாடுவது கண்டு திரும்பிப் பார்த்தார்.

''வணக்கம்ங்க. நாங்க கணக்கப் பிள்ளை ஐயாவப் பார்க்க வந்திருக் கோம்...'' என்றனர் கோரஸாக இருவர்.

''வாங்க. இருங்க, என்ன விஷயம்?'' என்று கேட்டபடியே எழுந்து அவர்கள் அருகில் வந்தார்.

# ரீகல்

சொட்டு நீலம்
வழங்கும்
1001 பரிசுகள்

வெள்ளி விழா போட்டி

ரீகல் சொட்டு நீலம் தயாரிப்பாளர்கள் உங்கள் ஆதரவினால் இப்பொழுது வெள்ளி விழா காண்கிறார்கள். இந்நன்நிகழ்ச்சியையொட்டி உங்களுக்கு வருகிறது
<u>ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி !</u>

| | |
|---|---|
| முதல் பரிசு | : ஒரு 5பவுன் தங்க நெக்லஸ் |
| இரண்டாவது பரிசு | : ஒரு கலர் டி.வி. |
| மூன்றாவது பரிசு | : ஒரு ப்ரிட்ஜ் |
| நான்காவது பரிசு | : ஒரு வாஷிங் மெஷின் |
| ஐந்தாவது பரிசு | : மூன்று வெட்கிரைண்டர்கள் |
| ஆறாவது பரிசு | : நான்கு மிக்ஸிகள் |
| ஏழாவது பரிசு | : 990 நபருக்கு தலா 10 கிராம் எடையுள்ள வெள்ளி காசுகள் |

## போட்டியின் விவரங்கள்

1. டி.வி.யில் வரும் 'சொட்டு நீலம் டோய்...' விளம்பரப்படத்தில் மிகச் சிறந்த நான்கு காட்சிகளை குறிப்பிடுக.
2. இரண்டாவதாக பின் வரும் வாக்கியத்தை மொத்தம் 25 வார்த்தைகளுக்கு மிகாமல் பூர்த்தி செய்யுங்கள்
"நான் ரீகல் சொட்டு நீலம் உபயோகிப்பது ஏனென்றால் ......."

இந்த இரண்டு கேள்விகளுக்கும் விடைகளை ஒரு போஸ்ட் கவரில் எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள். கவரில் ''ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி'' என்று குறிப்பிட வேண்டும். மறக்காமல் உங்கள் விலாசத்தையும் எழுதுங்கள்.

**நிபந்தனைகள் :**

**எங்கள் நான்கு அளவுகளில் உள்ள ஏதேனும் ஒரு பாட்டிலில் உள்ள ஒரு ரீகல் சொட்டு நீலம் லேபிளை இணைத்து அனுப்பவும்**
**விடைகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : 31-1-1992**
**நடுவர்கள் தீர்ப்பே முடிவானது.**

விடைகள் அனுப்ப வேண்டிய முகவரி :

The Southern India
Trading Agencies (India)
P.B. No.133,
Coimbatore - 641 001
Marketers of Regaul Blue
and Liquid Ultramarine Blue



ரீகல்

என்ன வெண்மையோ!
ஆஹா! என்ன வெண்மையோ!

SRI RAGHAVENDRA.

''இவங்க வழக்கமாய் வர்றவங்கதான் ஐயா'' என்று இடைவிட்டுக் கூறினான் தோட்டக்காரன்.

''அப்படியா...., இருங்க தம்பிகளா. நீங்க அவரோட உறவா?'' என்று கேட்டார் பொன்னம்பலம்.

''இல்லீங்க'' என்றனர் இருவரும்.

''உம் அப்படித்தான் சொல்லிக் கணும்?''

''சேரப்பா, போய் இவங்களுக்குக் காப்பி எடுத்துட்டு வா. ஆமாம்.... என்ன விஷயமாய் வந்திருக்கீங்க? அவர் ஊர்ல இல்லியே...'' என்றார் பொன்னம்பலம்.

''நாங்க... ஹாஸ்டல் பீஸ் கட்டப் பணம் வாங்கிட்டுப் போக வந்திருக்கோம். எப்பவும் கடைசி வெள்ளிக்கு மறுநாள் வரச் சொல்வாங்க. அது மாதிரி இன்னிக்கும் வந்தோம். அவங்க இல்லேன்னா நாளை வர்றோம்'' என்றான் ஒரு பையன்.

வியப்பாய் நிமிர்ந்தார் பொன்னம் பலம்.

கடைசி வெள்ளிக்கு மறுநாள் ஒவ்வொரு மாதமும் இங்கு வந்து ஹாஸ்டல் பீஸ் கட்ட பணம் வாங்கிட்டு போவாங்களா? அந்தப் பணம்....? இது மாதிரி அவர் ஒரு தடவையும் சொன்னதே இல்லையே. பேரேட்டிலேயும் குறிப்பைக்காணோமே. அவர் சொந்தப் பணத்தையும் தர்றதுக்கு வாய்ப்பில்லையே! அப்படியானால்....?

சட்டென்று அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. மளமளவென்று மனக் கணக்குப் போட்டார். இதுதான் நடந்திருக்கிறது என்கிற முடிவுக்கு வந்து விட்டார்.

சேரப்பன் கொணர்ந்த காப்பியை வழங்கியவர், மாலையோ, மறுநாளோ வந்து கணக்குப் பிள்ளையைப் பார்த்துப் பணம் வாங்கிப் போகுமாறு கூறி அனுப்பி வைத்தார்.

''ரொம்ப ஏழைப்பட்டவங்க போலி ருக்கு. மாசா மாசம் வந்து பணம் வாங் கிட்டுப் போவாங்க'' என்ற சேரப்பன் காலி தம்ளர்களுடன் உள்ளே போனான்.

''ஸோ, இந்தக் கணக்குப்பிள்ளை ரெண்டு கணக்கு எழுதிட்டிருக்கார். அதான் அப்படி ஒரு சாமான் லிஸ்ட் இருந்திருக்கு. பின்னே, கடைசி வெள்ளிச் செலவுக்கு வெறும் பதினைந்து ரூபாய்க்கா சாமான்கள் வாங்கியிருக்க முடியும். ஆனால்...., அந்தப் பில்லிலே கடைசி வெள்ளிக்கான சாமான் பட்டியல்னு குறிப்பு இருந்துச்சே. அதுல கடை முத்திரையும் தேதியும் இருந்துச்சே. அதே தேதில பேரேட்டில் ஐநூறு ரூபாய் செலவுன்னு கணக்கு ரொம்பத் தெளிவாய் இருந்ததே! அம்பாள் செலவுன்னா, அது இவங்களோட கல்விக்குப்பண்ற செலவா? போன மாசம் சிறப்பாப் பூஜை நடந்துச்சே! இவங்களும் பணம் வாங்கிட்டுப் போனதாச் சொல்றாங்களே! அப்ப... அப்ப..... கணக்குப்பிள்ளை தன் பணத்தைக் கொடுத் திருப்பாரோ? இருக்கும், இருக்கும். ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி இதுமாதிரி ரெண்டு பேருக்கு உதவணும்ன்னு என் கிட்டே சொன்னப்ப, நான் காதுலயே போட் டுக்கலே. எனக்குத்தான் கோவில் காரியம் தவிர வேறெதையும் பண்ணப் பிடிக்காதே! அதான் ஐடியா பண்ணி இப்படிச் செஞ்சி ருக்கார் அந்தக் கணக்குப்பிள்ளை. இன் னொரு பேரேடு, உண்மைக் கணக்கோட இருக்கும். இருக்கட்டும். பேரேட்டில் பணக் கணக்கு எழுதுவார்ன்னு நினைச்சேன். இவர் புண்ணியக் கணக்கில்ல எழுதிட்டிருக்கார். ஊருக்குப் போய் லெட்டர் போட்டுடணும். 'அம்பாள் காரியமும் நடக்கணும்; பையன் களுக்கு உதவியும் பண்ணணும்' என்று. ரெண்டு பேரேடு வேணாம், ஒரே பேரேடு போதும்ன்னு அழுத்தி எழுதிடணும்....'' - இப்படித் தமக்குள் கூறுகையில் அவருக்குச் சந்தோஷமாக இருந்தது.

---



## மூச்சு விட முப்பது ரூபாய்!

'ஒரு நிமிடம் சுத்தமான காற்றைச் சுவாசிக்க இரண்டு டாலர்' என்றால் திடுக்கிட வேண்டாம். மெக்ஸிகோ நகரம் உலகிலேயே மிக அழுக்கான நகரமாக உள்ளது. இங்குள்ள மிகப் பெரிய எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள் மற்றும் மூன்று மில்லியன் கார்கள் சேர்ந்து, வாயு மண்டலத்தை அழுக்கானதாகவும், ஆபத்தானதாகவும் மாற்றுவதில் போட்டி போடுகின்றன. இதனால் சுவாச மண்டல நோய்கள் காரணமாக இறந்து போவோர் எண்ணிக்கை அதிகம். இதைத் தடுக்க நகரத்தைச் சுற்றி ஆக்ஸிஜன் சிலிண்டர்கள் கொண்ட 'கியோஸ்க்'கள் (டெலிஃபோன் பூத் போன்றவை) உள்ளன. இங்கு நல்ல ஆக்ஸிஜனை சுவாசிக்கக் கட்டணமாக நிமிடத்திற்கு இரண்டு டாலர்கள் செலுத்த வேண்டும்!

ஆதாரம் : பிசினஸ் இண்டியா

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்.

## 12

ஷண்பேகர் அதிகம் பதற்றப்படாமல் இருந்தாலும் அவன் கால்களில் இரண்டு ரத்த முத்துக்கள் தெரிந்ததில் அவன் தேகமெங்கும் வியர்த்து விட்டிருந்தது. ''மனோஜ் உடனே என்னை தாலுக்கா, ஜில்லா, எட்குவார்ட்டர்ஸ் ஏதாவது ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போவது அவசியமாகிறது. இல்லையென்றால் இந்த செல்வியைக் கணக்குப் பண்ணாமல் கூட செத்துப் போய் விடுவேன். எனக்கு எத்தனையோ இருக்கிறது. சாவதாக உத்தேசம் இல்லை!'' என்று கொஞ்சம் சம்பந்தமில்லாமல் பேசத் துவங்கினான்.

அவனுக்குப் பெரிசாக மூச்சு வாங்கிக் கைகள் உதற ஆரம்பித்தன.

ஜீப் வருவதற்குக் கொஞ்சம் நேரமாகிவிட அந்தப் பெண் செல்வி, அவனை உட்கார வைத்து நெற்றியெல்லாம் ஒற்றி, தடவிக் கொடுத்தாள்.

''என்ன பாம்புங்க அது?''

''என்ன பாம்பா இருந்தா என்ன? கடிச்சிருச்சு.''

''இந்தப் பாம்பு தப்பிச்சிருச்சா?''

''மறுபடி மரத்துக்குப் போயிருச்சு.''

''மரத்திலிருந்து வந்தது மரத்துக்குப் போயிருச்சு. முனீஸ்வரன் அனுப்பிச்ச பாம்புங்க.''




சுஜாதா

''அய்யோ பேசியே என்னைச் சாகடித்து விடுவீர்கள் போலிருக்கிறதே!'' என்று அதட்டினான்.

''யாராவது ஏதாவது காரியம் பண்ணுங்களேன், எங்கே ஜீப்?''

''ஆள் போயிருக்கிறது.''

''அதற்குள் நான் செத்துப் போய் விடுவேன். எனக்கு இப்போதே கண் மயக்கம் ஏற்படுகிறது. மனோஜ், நான் சாக்ரட்டீஸ் மாதிரி.. எனக்குக் கொஞ்சம் கடன் இருக்கிறது.''

''டோண்ட் பி ஸில்லி.''

''இது என்னய்யா?''

ஓர் ஆசாமி பச்சையாக ஏதோ கொண்டு வந்தான்.

''முனீஸ்வரன் மரத்து இலைங்க. அதை அரைச்சுக் கடி பட்ட இடத்து மேல பத்துப் போடச் சொல்லுங்க...''

''அதெல்லாம் வேலை செய்யாதுய்யா. அதும் கட்டுவிரியன்.''

''அட போடுங்கய்யான்னா'' என்று அவன் அதட்ட, ஷண்பேகர் என்னவென்று விசாரித்தான்.

''ஸம் கண்ட்ரி மெடிஸின் ஃப்ரம் தட் ட்ரி! யு வில் பி ஆல்ரைட் ஷண்...''

''எதையாவது போடு, போகும் வரை'' என்றான்.

அவர்கள் அவன் காயத்துக்கு மேல் கட்டியிருந்த கயிற்றைத் தளர்த்தி, அந்த இடத்தில் அந்த மரத்துப் பச்சிலைத் துவையலை வைத்தார்கள்.

ஜீப் வருவதற்குள் ஷண்பேகருக்குச் சரியாகி விட்டிருந்தது. வியர்வை ஊற்றுவது நின்று போய், குரலில் நடுக்கம் போய், தெளிவு வந்து, காலைக் கையை உதறக் கூட ஆரம்பித்து விட்டான்.

''காயம்... போச்சு'' என்றான்.

''பாத்தீங்களா...''

''ஐ காண்ட் பிலீவ் இட்.''

''என்ன சொன்னேன் பாத்தீங்களா! ஆஸ்பத்திரியும் வேண்டாம். எதும் வேண்டாம். இன்னேரம் செட்டு செத்திருப்பாரு. பாத்தீங்களா நம்ம முனிபலத்தை! இதைப் போய் வெட்டறிங்களே...''

''பாம்பை அனுப்பிச்சுத் தன் சக்தியைக் காட்றதுக்குன்னே செய்திருக்காரு. ரொம்பக் கிண்டல்காரருங்க.''

''யாருப்பா?''

''நம்ம முனீஸ்வரருதாங்க. இந்த சின்னப் பசங்க வெவரம் தெரியாம ஸைன்ஜு" அது இதுங்கறாங்க. அதுக்கு அப்பாலும் ஒரு ஞானம் இருக்குதுன்னு நிருபிச்சே காட்டிட்டாருங்க. அதுக்காகத் தான் இந்த தெய்வத்துக்குக் கூட்டம் வந்து அம்முது. கலியுக தெய்வங்க. இப்படித் தான்... ஒருமுறை...''

மனோஜ் பிரமிப்புடன்தான் இருந்தான். நம்பவே முடியவில்லை. அவர்கள் சொல்வதில் ஏதோ இருக்கிறதோ!



''பட்ஜெட்டினால் விலைவாசி ஏற்றத்தைப் பற்றி உங்க பத்திரிகையில் எதுவுமே எழுதலை போலிருக்கே...?''

''யார் சொன்னாங்க! ஒரு நடிகை பெட்ரோல் விலை ஏறியதால் தான் துன்பப்படுவதைப் பற்றி பேட்டி கொடுத்திருக்காங்களே, எங்க பத்திரிகைக்கு!''

- குரு கிருஷ்ணா.

ஷண்பேகர் ஒரு சிகரெட் பற்ற வைத்து, காலில் கட்டை உருவிப் போட்டு ''எல்லாரும் பேக்அப்! செல்வி மட்டும் இருக்கலாம். கருப்பாயி நீயும் இரு'' என்று சொல்லி விட்டு, பாக்ஸின் மேல் உட்கார்ந்திருந்த கம்ப்யூட்டரின் பச்சைத் திரையை உயிர்ப்பித்து, எழுத்துக்கள் பண்ண ஆரம்பித்தான். கிராமத்தவர்கள் வியப்புடன் முனீஸ்வரனின் பல்வேறு பெருமைகளைப் பேசிக் கொண்டு செல்ல, அன்று கணிசமாக வேலை நடந்தது. எல்லா பாக்கிங் பாக்ஸ்களையும் களைந்து ஓரத்தில் அடுக்கி, பாலித்தின் உறைகளை நீக்கி, ஃபவுண்டேஷன் போல்ட் போட்ட கவுண்டர் பாய் ஸாக்கு ஆரங்களை வெட்டி நிறையவே பண்ணி விட்டான் ஷண்பேகர்.

கம்ப்யூட்டரில் செல்வி . கருப்பாயி இருவர் உதவியுடன் சிஸ்டம் செக் எல்லாம் முடித்து விட்டதாகச் சொன்னான். துளை வைத்த காகிதத்தில் இடது கையால் செல்வியைப் படம் வரைந்து, அதை அவளிடம் கொடுத்தான். அவள் சிரிப்பில் கன்னம் முழுவதும் சிவந்தது.

கருப்பாயி ''என் போட்டோ'' என்றாள்.

''உன்னையும் போட்டோ பண்றேன் கவலைப்படாதே!''

மனோஜ், அவன் விஷமக் கண்களைப் பார்த்து ''நீ பாம்பு கடித்துச் செத்துப் போயிருக்கலாம் என்று தோன்றுகிறது.''

''அத்தனை சுலபமாகச் சாவேனா?''

''ஷண் வாட் ஹாப்பண்டு?''

''என்ன?''

''எப்படி நீ காப்பாற்றப்பட்டாய்?''

''ஸிம்பிள்! பாம்பு விஷப்பாம்பு இல்லை. ஏதோ வயல் பாம்பு. மண் பாம்பு!''

''சே இந்த மாதிரி நினைக்கவே இல்லை.''

''எனக்குப் பதினைந்து நிமிஷத்தில் தெரிந்து விட்டது. பயத்தால்தான் வியர்த்திருந்தேனே ஒழிய, டாக்ஸிக் ஸிம்ப்டம்ஸ் எதும் இல்லை. இருந்தும் கொஞ்சம் 'புஹானா' செய்தேன். இந்த பெண்ணின் சிசுருஷை கிடைத்ததல்லவா, லுக் அட் ஹர் ஐஸ்.... ஆகஸ்ட் மாதத்து நாவல் பழம் போல!''

ஆண்டென்னாவின் பாகங்களைச் களை களையாகப் பிரித்தான். ஃபீட் ஹார்ன் சேதமில்லாமல் வந்திருந்தது. எல் என் ஏயும் சரியாக இருந்தது.

''இன்னும் பதினைந்து நாட்களுக்குள் முடித்து விடலாம்.''

''மரம்?''

''மரம்...''

திரும்ப டிஸியின் வீட்டுக்கு வந்த போது, ப்ரமிளா தன் பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டிருந்தாள்.

''என்ன?''

''எனக்கு டோட்டு இல்லாமல் பைத்தியம் பிடித்து விடும்.''

''உனக்கு டோட்டு முக்கியமா, நான் முக்கியமா?''

''ரெண்டு பேரும்தான்'' என்றாள்.

''நான் உன் அப்பாவிடம் பேசி, பம்பாயிலிருந்து வரச் சொல்லட்டுமா?''

''அவர்கள் வர மாட்டார்கள். நான் போகிறேன். எனக்கு இந்தக் கிராமம் அலுத்து விட்டது. டோட்டு ஞாபகமாகவே இருக்கிறது.''

''கிராமத்தில் எத்தனையோ குட்டி நாய்கள் காணக் கிடைக்கின்றன. அது என்ன தவிஸ்?''

''முனீஸ்வரன் தாயத்து.''

''எதற்கு?''

''டோட்டு திரும்பி வரும் என்று சொல்லியிருக்கிறார்கள்.''

''என்னது?''

''பூசாரி என்னிடம் வந்து தாயத்தை வைத்து, ராகுகால பூஜை செய்தால் பதினைந்து நாட்களில் டோட்டு உயிருடன் திரும்ப வரும் என்று சொல்லியிருக்கிறார்.''

''வாலை ஆட்டிக் கொண்டு?''

''ஆமாம்.''

ஷண்பேகரும் மனோஜுூம் பார்த்துக் கொண்டார்கள்.

''என்ன விந்தையான கிராமம் இது!'' என்றான் மனோஜ்.

''இங்கே பக்தியும் கிடைக்கிறது. பாங்கும் கிடைக்கிறது. பொட்டலம் மூன்று ரூபாய். பக்கத்தில் பெரிய காலேஜ் இருக்கிற தாம் முப்பது கிலோ மீட்டரில்.''

பூசாரி வந்து ப்ரமிளாவின் நெற்றியில் குங்குமம் வைத்து விட்டு மனோஜுூக்கும் ஷண்பேகருக்கும் பிரசாதம் கொடுத்து, ''பாம்பு கடிச்சு உயிரோடிருக்காருன்னாப் பாத்துக்கங்க, டிஸிய்யா''என்றான்.

''இஸ் இட் ட்ரு ஷண்பேகர்'' என்றார் டிஸி.

''இட்ஸ் ட்ரு - மிராக்குலஸ்'' என்ற ஷண்பேகர் ''ஸம்திங்ஸ் காண்ட் பி எக்ஸ்ப் ளெய்ன்டு.''

''பாம்பு கடிச்ச செய்தி போயி பக்கத்து கிராமத்தில் இருந்தெல்லாம் வண்டி கட்டிக் கிட்டு வந்திருக்காங்க... மரத்தடியில எத்தனை கூட்டம் பாருங்க. அஸ்பெஸ் டாஸ்ல ஒருஷெட் போட்டு, பஸ் ஸ்டாண் டும் வக்கட்டிங்கன்னா உங்களுக்கு பிர மோசன் வந்துருங்க! என்றான் பூசாரி.''

''பார்க்கலாம். லேண்டு இவங் களுது...''

''இவங்கதான் இடத்தை மாத்தறதாச் சொல்லிட்டாங்களே!''

''அப்படியா!''

மனோஜ், ''அதெல்லாம் இல்லை'' என்றான்.

''அட்லீஷ்ட் மரத்தை வெட்ட மாட் டாங்க இனிமே. கண்கூடாப் பாத்துட்டீங்க. முனீஸ்வரன் கோபத்தையும் சாந்தத்தை யும்... நாயச் சாவடிச்சு மனுசனைப் பொழைக்க வெச்சுட்டாருங்க...''

''அப்ப இந்தானு நாய் உயிருங்கறீங்க. ஷண் யுனோ வாட் ஹி ஸேஸ்'' என்று அவனுக்கு மொழிபெயர்க்க, ஷண்பேகர் 'வவ் வவ்' என்றான். ''ப்ரமிளாவின் மடியில் இருப்பதென்றால் நான் டோட்டு வாகச் சம்மதம்.''

''எல்லாமே கிண்டல்தாங்க உங்க ளுக்கு. ஆனா ஒருநா நம்பிக்கை வந்துதான் ஆகணும் உங்களுக்கு.''

ஷண்பேகர் ராத்திரி நடேச பண்டிதர் வீட்டில் செல்வி சாப்பிடக் கூப்பிட்டிருக் கிறதாகச் சொல்லி விட்டுப் போய் விட்டான். மனோஜ் இல்லாததைக் கற் பனை பண்ணிக் கொண்டான். இந்த சபலத் தில் ரசாபாசமாகச் செய்து விடப் போகி றானே என்று கவலைப்பட்டான். ஆனால் ஷண்பேகர் காதலிக்கவும் தெரிந்தவன், சமாளிக்கவும் தெரிந்தவன், சாதுர்யங்களும் தெரிந்தவன். அவன் முட்டாள்தனமாக ஏதும் செய்ய மாட்டான். சந்தர்ப்பமறிந்து தான்... என்று அதைப் பற்றி நினைக்க அவன் விரும்பவில்லை.

ப்ரமிளாவும் டிஸியின் மனைவியும் இப்போது பரம முனீஸ்வர பக்தைகளாகி விட்டதில் ப்ரமிளா பாண்ட் ஜீன்ஸ் போட் டுக் கொள்வதை மறந்து போய், ஏதோ அவளே அம்மன் போலத் தலைய வாரி நெற்றிபூராக் குங்குமம் இட்டுக் கொண்டு, ஜீப்பில் முனீஸ்வரன் கோயில் போய் விட்டு வந்தார்கள். ராத்திரி எல்லோரும் டெண்ட் சினிமாவில் 'சின்னதம்பி' பார்ப்பதாக ஏற்பாடாயிற்று.

டிஸி வந்திருக்கிறார் என்று மரியாதை யாக பேண்டு வாசித்தார்கள். தனிப்பட்ட பெஞ்சுகளின் மேல் ஜமுக்காளம் விரித்து, அவர்களுக்காகக் காத்திருந்து படம் ஆரம் பித்தார்கள். ஷண்பேகர் செல்வியின் பக்கத் தில் உட்கார்ந்திருந்தான். கருப்பாயியும் உட்கார்ந்திருந்தாள். படத்தின் இடை வேளையின் போது, ஷண்பேகர் செல்வி இருவரையும் காணவில்லை. மனோ ஜுூக்குக் கவலையாக இருந்தது. படம் முடிந்தது. ஜீப்பைத் தொடர்ந்து ஓர் உருவம் வர, நிறுத்திப் பார்த்ததில் நடேச பண்டிதர் ''அய்யா செல்வியைப் பார்த்தீங்களா?'' என்று மனோஜைக் கேட்டார்.

(தொடரும்)



''என்னங்க இது... பெண் பார்க்கற துக்கு பிளாஸ்க், டிபன் கேரியரெல்லாம் எடுத்துக்கிட்டுப் போறீங்க?''

''என்ன செய்யறது... பையனோட சமையலையும், காப்பியையும் பெண் வீட்டிலே சாம்ப்பிள் எடுத்துக்கிட்டு வரச் சொல்லியிருக்காங்க!''

- வேதபுரி. எஸ். ரமேஷ்.

# கல்கி

## தீபாவளி மலர் - 1991

✤ வண்ணப்படம் : திலிப் பானர்ஜி

**வண்ணம், வனப்புடன்**

**இறையுணர்வும்**

**இலக்கியச் சுவையும்**

**கனிந்த தயாரிப்பு...**

ஒளிப்படங்களின் ஊர்வலம் :

- துவாரகை
- பவானி
- நெக்குருகச் செய்யும் பிரார்த்தனைகள்
- பட்டுப் புடைவைகள் பலவிதம்!

ஓவியங்களின் அணிவகுப்பு :

- சப்த ஸ்வர தேவதைகள்
- கங்கைக் கரையில் ஒரு மல்லிகை மாலை
  - சமஸ்கிருத நாடகம்
- சிக்கல் திருத்தலக் காட்சிகள்
- கவிதை மடல்.

வணங்கச் செய்யும்

வண்ணப்படங்கள் :

- காஞ்சி முனிவர்கள்
- காந்திஜி

சிந்திக்க வைக்கும் சுவையான

கட்டுரைகள் .

**மற்றும்**

- ஸுசிலா, எம். ஏ.
  - அமரர் கல்கியின் நெடுங்கதை
- தமயந்தியின் குறுநாவல்
- கோகுலம் பக்கங்கள்
- மங்கையர் மலர்

**விலை ரூ 30/-**

பதிவுத் தபாலில் செலவு ரூ. 8/- தனி.

உடனடியாக ஏஜெண்டிடமோ கல்கி அலுவலகத்துக்கு நேரில் எழுதியோ பதிவு செய்து கொள்ளுங்கள்.

**மானேஜர், கல்கி, சென்னை - 32**

ரயில் ஜன்னல் வழியே - எதிர்த்திசையில் வேகமாக ஓடும் தந்திக்கம்பங்களை வெறித்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள் பாகிரதி. மறுநாள் காலை அவள் இறங்க வேண்டிய நாக்பூர் வந்துவிடும். அவள் போகும் இடம் அந்நியம் அல்ல. அவள் பெற்ற மகள் கௌரியின் வீடுதான். அவள் கல்யாணம் முடிந்து புக்ககம் அனுப்பி ஆறு வருஷங்கள் முடியப் போகின்றன. நாளைதான் அவள் வீட்டு வாயிற்படியை முதன் முதலாக மிதிக்கப் போகிறாள்.

அவள் இதயமே அவளை ஆயிரம் கேள்விகள் கேட்டது. எந்த உரிமையில் அவளிடம் சலுகையை எதிர்பார்த்து நீ போகிறாய்! வைரமோ தங்கமோ வேண்டாம். பள்ளிக்கூடப் படிப்பையாவது முடிக்க அனுமதித்தாயா? உன் பிள்ளை படிக்க வேண்டும் என்பதற்காக அவள் படிப்பை ஒன்பதாவதோடு நிறுத்தியவள் நீதானே? அவள் படித்த கான்வெண்ட் பள்ளியிலிருந்து இரண்டு சகோதரியர் உன் வீடு தேடி வந்து ''கெட்டிக்காரப் பெண், படிப்பை நிறுத்தாதே!'' என எத்தனை தூரம் கெஞ்சினார்கள்? நீ மசியவில்லையே.

சரி.... படிப்புத் தான் வேண்டாம். கௌரிக்குத்தான் எத்தனை அருமையான குரல் வளம்? எதிர் வீட்டில் குடியிருந்த பாட்டு வாத்தியாரம்மா - பணம் ஏதும் வாங்காமலே பாட்டு சொல்லிக் கொடுக்க முன் வந்தார்களே... அப்போதாவது ஒப்புக்கொண்டாயா! நீ சமையல் வேலைக்கு வெளியில் போவதால் - வீட்டில் இருந்து வேளா வேளைக்கு உன் பிள்ளைக்கு எல்லாம் வக்கணையாகச் செய்து போட வேண்டும் என்பதற்காகச் சமையல் அறையில் முடக்கி வைத்தாயே!

அதுவும் போகட்டும். கூப்பிடு தூரத்தில் - மகளிர் மன்றத்தில் - வாரத்தில் மூன்று நாட்கள் மட்டும் - இலவசமாகத் தையல் வகுப்புகள் நடத்தினார்களே?... பயிற்சியின் முடிவில் தையல் மிஷின்கள் கூட அன்பளிப்பாகக் கொடுத்தார்களே? கௌரி எத்தனை கெஞ்சினாள்! நீ அனுப்பினாயா? நீ இட்டு வைத்த அப்பளங்களைத் தெருத் தெருவாக - வீடு வீடாக விற்று வரத்தானே அவளை விரட்டினாய்? அப்படி அவள் சம்பாதித்த பணத்தையெல்லாம் உன் பிள்ளையின் காலேஜ் படிப்பிற்குத்தானே செலவழித்தாய்..

கௌரி செய்த புண்ணியம் - உன்னுடைய தூரத்து உறவுக்காரப் பையன்... பையனா அவன்! இல்லை, வயது நாற்பதைத் தொட்டிருந்தது. வரதட்சணை ஒரு பைசா வாங்காமல் - இருபத்தெட்டு வயது கௌரியை - உள்ளூர் வைதீக சமாஜத்தினர் நடத்திய - சமஷ்டி கல்யாணத்தில் தாலி கட்டிக் கூட்டிக் கொண்டு வடக்கே எங்கேயோ போனான். அவனுக்கு ராணுவத்தில் உத்தியோகம்.



கௌரிதான் என்ன செய்வாள்? கல்யாணம்

ஆன புதிதில் மாதம் தவறாமல் உனக்குக் கடிதம் எழுதினாள். ஆனால் நீ பதில் சரியாகப் போடவில்லையே. பெண் குழந்தை பிறந்தது எனத் தகவல் வந்தபோது கூட 'சந்தோஷம்' என ஒரு தபால் கார்டு போட்டவுடன் போதும் என்று நினைத்தாயே!

ஊர் ஊராக மாற்றி மாற்றிப் போன கௌரி கடைசியாக நாக்பூர் போனவுடன் ஒரு கார்டு போட்டிருந்தாள். அதில் அவள் புது விலாசம் இருந்தது. அது மட்டும் உன் பெட்டியடியில் உனக்குக் கிடைத்திருக்காவிட்டால் - இப்போதுதான் நீ புறப்பட்டிருக்க முடியுமா?

பாகீரதி மனத்தை அடக்கினாள், 'போதும், போதும்! நானும் ஒரு தாய்தான். எனக்கு மட்டும் என் பெண் நன்றாக இருக்க வேண்டும் என்ற ஆசை இல்லையா? அவளை ஒரு மாதமாவது கூட்டிக் கொண்டு சீராட்ட வேண்டும் என்ற எண்ணம் இல்லையா? அப்படிச் செய்ய முடியாமல் ஒரு 'விபத்து' நடந்து விட்டதே!'

ஆமாம்... அந்த விபத்தின் மறுபெயர் தான் அவள் பிள்ளை - கோபியின் ''கல்யாணம்''!

# மகள் வீட்டுப் பழகள்

**கோ**பிக்குப் படிப்பு நன்றாக வந்தது. கூடவே ஒரு கர்வமும் வளர்ந்தது. ஐ.ஐ.டி. பரீட்சையில் இரண்டாவது இடம் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டவுடனேயே அவன் பார்வையில் ஒரு மிடுக்கும் அலட்சியமும் தெரிந்தன. அந்தப் படிப்பு முடிந்தவுடன் மேலே தொடர்வதற்கு உபகாரச் சம்பளத்துடன் இடம் கிடைத்த பிறகு - பாகீரதியின் தயவு அவனுக்குத் தேவைப்படாமல் போயிற்று.

அந்தப் படிப்பு முடியவும் நல்லதொரு வேலை கிடைக்கவும் சரியாக இருந்தது. நல்ல கம்பெனியில் டெபுடி ஜெனரல் மானேஜர் உத்தியோகம். ஆரம்பச் சம்பளமே எட்டாயிரத்தைத் தொட்டது.

அவன் உழைப்பையும் திறமையையும் எடை போட்ட கம்பெனி மானேஜிங் டைரக்டர் நரசிம்மனுக்கு அவனைத் தன் மருமகனாக்கிக் கொள்ளும் எண்ணம் ஏற்பட்டது. பாகீரதியிடம் பேசினார். அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக் கொண்டு நெடுஞ்சாண் கிடையாக நமஸ்கரித்து எழுந்தார். 'உங்களைப் பார்த்தால் என் அம்மா மாதிரி படுகிறது என ''ஐஸ்'' வைத்தார். அவர் மனைவி பங்கஜம் அவருக்கு ஒரு படி மேலே. பாகீரதியின் எதிரிலே உட்காரக் கூடத் தயங்குபவள் போல நடித்தாள்.

இப்படிப்பட்ட ''நல்லவர்''களுக்குப் பிறந்த பெண் மட்டும் குணத்திலும் மோசமாகவா இருப்பாள் என நினைத்த பாகீரதி - பாமாவைப் பெண் பார்க்கப் போனாள். பெண் அடக்கமாக - பவ்யமாகத் தெரிந்தாள். அவளுக்குப் பிடித்துப் போயிற்று. கோபிக்குச் சம்மதம் என அவன் பாமாவைப் பார்த்த பார்வையிலிருந்து புரிந்து கொண்டாள்.

பாகீரதிக்குக் கிடைத்த மரியாதையெல்லாம் பாமாவின் கழுத்தில் தாலி ஏறும் வரைதான் நீடித்தது. முகூர்த்த வேளை விருந்திற்குக் கூட அவளையும் கௌரியையும் விசேஷமாக அழைக்கவில்லை. நல்ல வேளையாகக் கௌரியின் கணவன் கல்யாணத்திற்கு வரவில்லை. வந்திருந்தால் அவன் ரொம்ப ''அவமானப்பட்டு''ப் போயிருப்பான்.

பாமா ''குடித்தனம்'' நடத்த வந்தாள். என்ன காரணமோ ஆரம்பத்திலிருந்தே அவளுக்குப் பாகீரதியைப் பார்க்கக் கூடப் பிடிக்கவில்லை. நரைத்துப் போன தலையும் - குழி விழுந்த கன்னங்களும் - குச்சி குச்சியாகக் கைகால்களும் - தொடர்ந்த இருமலும் அவளுக்கு அருவருப்பாக இருந்தன.

பாகீரதிக்கு வீட்டில் எந்த வேலையும் இல்லை. அவள் எது செய்தாலும் பிடிப்பதில்லை. எல்லாவற்றுக்கும் ஆள் படை இருந்தது. பிள்ளையோ, மருமகளோ அவள் வீட்டில் இருப்பதாகவே நினைக்க வில்லை. வீட்டில் உள்ள சோபா, நாற்காலி, பீரோ ஆகியவற்றோடு அவளும் ஒரு ஜடப்பொருளாகத் தெரிந்தாள். நாட்கள் செல்லச் செல்ல அவள் கௌரவம் தேய்ந்தது. எசமானனும் எசமானியுமே மரியாதை காட்டாததால் வேலைக்கு இருந்தவர்களும் அலட்சியப் படுத்தத் தொடங்கினார்கள்.

அவன் அப்பா அவனை அனாதரவாக விட்டு இறந்து போன போது கோபிக்கு

## ஜனனி

வயது ஐந்து. கௌரிக்கு எட்டு வயது. அன்று முதல் பதினைந்து வருடங்கள் பாகீரதி மாடாக உழைத்து இருக்கிறாள். தன் ரத்தம் சுண்ட அடுப்படியில் வெந்திருக்கிறாள். பெற்ற பெண்ணிற்காக ஒரு குந்துமணி தங்கம் கூடச் சேர்க்காமல் பிள்ளையை மட்டும் பாலும் பழமுமாகக் கொடுத்து வளர்த்திருக்கிறாள்.

அப்படிப்பட்ட கோபியா இப்படி ஆகி விட்டான்!

ஏதோ பயிற்சிக்காகக் கோபி இரண்டு வருஷங்கள் அமெரிக்கா போகப் போகிறானாம். பாமா உடன் செல்லவில்லை. 'போறதுக்கு முன்னாலே உங்க அம்மாவுக்கு ஒரு வழி செய்து விட்டுப் போங்கள்.. என் தலையிலே அந்தக் கிழத்தைக் கட்டிவிட்டுப் போகாதீர்கள்!' எனத் தீர்மானமாகக் கோபியிடம் பாமா சொல்லி விட்டாள்.

இந்த விஷயத்தை யாரும் நேரிடையாகப் பாகீரதியிடம் சொல்லவில்லை. வேலைக்காரர்கள் பேச்சிலிருந்துதான் பாகீரதி தெரிந்து கொண்டாள்.

பாகீரதி அப்போது தான் நிதானம் இழந்தாள். பெற்றவள் அத்தனை கேவலமாகப் போய் விட்டாளா! மாடியில் கோபியின் அறைக்குப் போனாள். தாளிடப்பட்டிருந்த அறைக் கதவைத் தட்டினாள்.

கதவைத் திறந்தாள் பாமா, 'என்ன?' என விழிகளால் வினவினாள்.

''கோபி கிட்டக் கொஞ்சம் பேசணும்!''

பாமா உள் பக்கம் திரும்பிக் குரல் கொடுத்தாள்.

''கோபி... உங்கம்மா உங்களைக் கொஞ்ச வந்திருக்கா... என்னன்னு கேட்டுட்டு வாங்கோ!'' என்றாள் இகழ்ச்சியாக.

விரல்களின் இடுக்கில் புகையும் சிகரெட்டுடன் வந்தான் கோபி.

''ஏம்மா! உனக்கு இப்போ என்ன வேணும்! நாங்க ஏதோ முக்கியமான விஷயம் பேசிண்டு இருக்கிறபோது எதற்குப் பிராணனை வாங்கறே?''

''இல்லைப்பா... சமையற்கார நானா சொன்னான். நாளைக்கு என்னை எங்கேயோ.....''

''எங்கேயோ இல்லை. இதே ஊரிலதான். ரொம்ப நன்னாக் கவனிச்சுப்பா... பாமா போய் பணம் எல்லாம் கட்டிட்டு வந்துட்டா. சாகிற வரைக்கும் கவலையில்லை. உக்காந்து சாப்பிடலாம்'' என்றான் கோபி.

''ஏம்பா கோபி! என்னை ஏன் உனக்குப் பிடிக்காம போச்சு... உன்னை வளர்த்து ஆளாக்கினதுக்கு இது தான் மரியாதையா.... எங்கேயோ அனாதை மாதிரி.''

''இதோ பார் அம்மா! எனக்கு ஆயிரம் பிரச்னை. என் ஆத்திரத்தைக் கிளறாதே... உனக்கு விருப்பம் இருந்தால் நாங்க காட்டற இடத்திலே இரு... உனக்கு ஒரு சிரமமும் இருக்காது. இஷ்டம் இல்லேன்னா எங்கே வேண்டுமானாலும் போய் எப்படி வேண்டுமானாலும் இரு. இங்கே பாமாவால் உன்னைக் கவனித்துக் கொள்ள முடியாது... ஆமாம்.''

கோபி அவள் முகத்தில் அறைந்தாற் போல் கதவை மூடினான்.

மறுநாள் காலை. பாகீரதி புறப்பட்டு விட்டாள்.

பாத்திரம் விற்ற பணம் ஐநூறு இருந்தது. பங்களா 'வாட்ச்மேன்' நல்லவன். தன் பிள்ளையை விட்டு ரயிலேற்றி விடச் சொன்னாள். தன் பெண்ணைப் பார்க்க பாகீரதி தைரியமாகப் புறப்பட்டு விட்டாள்.

பாகீரதிக்குக் கொஞ்சம் அதிர்ஷ்டம் எஞ்சியிருந்திருக்க வேண்டும். அதே பெட்டியில் ஒரு தமிழ்க் குடும்பம் நாக்பூர் வரை போய்க் கொண்டிருந்தது. கௌரியின் விலாசம் அவர்கள் போக வேண்டிய பாதையில்தான் இருந்ததாம். அவர்களே வீட்டு வாசல் வரை கொண்டு விடுவதாகச் சொன்னார்கள்.

**போ**கும் வழியில் ''டோங்கா''வை நிறுத்தி பாகீரதியை இறக்கிவிட்டு உடன் வந்தவர்கள் போய் விட்டார்கள். அவர்கள் சுட்டிக் காட்டிய வீட்டின் கதவைப் பாகீரதி தட்டினாள்.

கதவு திறந்தது. திறந்தவள் கௌரிதான். பாகீரதியைக் கொஞ்சமும் எதிர்பார்க்காததால் சில கணங்கள் மௌனித்துப் போனாள். பாகீரதிக்கும் தன் பெண்ணை அடையாளம் தெரியவில்லை. கருவேப்பிலைக்குச்சி போல் இருந்த தன் பெண் இப்படிப் பெங்களூர் தக்காளி போல் இருப்பாள் என அவள் எதிர்பார்க்கவில்லை. வடக்கத்தி பாணியில் உடை உடுத்தியிருந்தாள்.

''அம்மா... அம்மா... நீ....'' என முதலில் குழறிய கௌரி 'சட்'டென்று அம்மாவின் கையில் வைத்திருந்த பையை வாங்கிக் கொண்டு, 'உள்ளே வா!'' என அழைத்துப் போனாள்.

அங்கே மருமகப் பிள்ளை படுக்கையில் கிடந்தார். இரண்டு கால்களும் முழங்கால்களுக்குக் கீழ் இல்லை. பக்கத்தில் சக்கர நாற்காலி.

''இது என்னடி விபரீதம், கௌரி!'' எனப் பெருங் குரல் எடுத்து அழ ஆரம்பித்தாள் பாகீரதி.

''உனக்கு விஷயமே தெரியாதா? கோபிக்குக் கடிதம் போட்டு இருந்தோமே! உனக்குச் சொல்லவில்லையா? மூன்று வருஷங்கள் முன் மணிப்பூரில் இவர் போன ஜீப்... கண்ணிவெடியில் சிக்கி... உம்.... என் மாங்கல்யம் பிழைத்ததே பெரிசு.''

## கல்கி பொன் விழா நாவல் போட்டி

**எழுத்தாளர்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கு இணங்க, கல்கி பொன் விழா நாவல் போட்டியின் முடிவு தேதி, அக்டோபர் 31, 1991 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.**

கோபி... மனிதனா அவன்? தன்னிடம் இதை மறைத்து விட்டானே? அப்போது கூட அந்தத் தாயின் மனம் அவனைக் குற்றம் சொல்ல விரும்பவில்லை. அந்தப் பெண் பாமாதான் வேண்டுமென்று கடிதத்தை மறைத்திருக்க வேண்டும் என நினைத்தாள்.

''நாங்கள் ஏதாவது பண உதவி கேட்டுவிடுவோம் எனக் கோபி பயந்து விட்டான் போலிருக்கிறது. அனுதாபத்திற்கு ஒரு கடிதமாவது போட்டிருக்கலாம்.''

பாகிரதிக்குப் புரிந்து விட்டது. அங்கே பண வசதி இருந்தது. ஆனால் பாசம் இல்லை. இங்கே பாசமும் பரந்த மனமும் இருந்தாலும் பண வசதி...

தன் பார்வையைச் சுற்று முற்றும் ஓட விட்டாள். வசதிக்கு ஒன்றும் குறைவில்லை. டி.வி., குளிர் சாதனப் பெட்டி, கிரைண்டர்.

''கௌரி.... எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை!''

''நீ இப்போது ஒன்றும் சொல்ல வேண்டாம். முதலில் குளித்துவிட்டுச் சாப்பிடு!'' என உபசரித்தாள் கௌரி.

பாகிரதி சாப்பிடும் போது பக்கத்தில் நின்று பரிமாறியபடி கௌரி சொன்னாள்.

''நான் சீர் செனத்தி ஏதும் கொண்டு வரவில்லையே என்ற வருத்தமோ, மனத் தாங்கலோ இவருக்குத் துளிக்கூடக் கிடையாது. நான் எஸ்.எஸ்.எல்.ஸி கூடப் படிக்கவில்லையே எனத்தான் சங்கடப்பட்டார். ஒரே வருஷம். இரவும் பகலுமாக எனக்குச் சொல்லிக் கொடுத்து என்னைப் பாஸ் செய்ய வைத்துவிட்டார். அதற்குப் பிறகு ஓர் ஆறுமாதம் - 'ப்யூட்டி ட்ரீட்மெண்ட்' - அதுதான் பெண்களுக்கு ஜடை அலங்காரம் ஒப்பனை - இவற்றைக் கற்றுக் கொண்டேன். இரவு நேரத்தில் ஒரு ஸிந்திப் பெண் மேஜை விரிப்புகள், தரைக் கம்பளங்கள் எப்படிப் பின்னுவது எனக் கற்றுக் கொடுத்தாள். இவருக்கு இப்படி ஆன பிறகு - ராணுவத்தில் அவருக்குக் கிடைத்த மொத்த உதவிப் பணத்தைக் கொண்டு ஒரு சின்ன 'ப்யூட்டி-பார்லர்'' நடத்துகிறேன். இரண்டு வருஷமாக நல்லபடியாக நடக்கிறது. என்னிடம் இரண்டு பெண்கள் வேலை செய்கிறார்கள். வங்கியில் கடன் வாங்கி விரிப்புகள், கம்பளங்கள் தயாரிக்க ஒரு சின்னத் தொழிற்கூடம் ஆரம்பித்திருக்கிறோம். இவர்தான் மேற்பார்வை செய்கிறார். வங்கியில் வாங்கிய கடனைக் கூட அநேகமாகத் திருப்பிவிட்டோம். அது இருக்கட்டும். என்னைப் பற்றியே சொல்லிக் கொண்டிருக்கிறேன். கோபி, பாமா எல்லாம் எப்படி இருக்கிறார்கள்.''

அங்கே நடப்பது, நடந்தது எல்லாம் பாகிரதி விவரித்தாள்.

''எனக்கு இந்த வீட்டுப்படியேறக் கூட தகுதியில்லை. உனக்கு நான் ஒன்றுமே செய்யவில்லை. நீ செய்த புண்ணியம், உன் நல்ல மனசு இப்படி ஒருவருக்கு வாழ்க்கைப்பட்டிருக்கிறாய். உன்னைப் பார்த்து விட்ட திருப்தியில் காசி, ராமேஸ்வரம் என்று எங்கேயாவது போய் எஞ்சிய நாட்களை....''

''கௌரி... உன் அம்மாவை இங்கே கூப்பிடு!'' என்றார் கௌரியின் கணவன்.

பாகிரதி அவன் கட்டிலின் அருகே போய் நின்றாள்.

''இதோ பாருங்கள்... நான் உங்களை அந்நியமாக என்றும் நினைத்ததில்லை. கௌரிக்கு அம்மா என்றால் எனக்கும் அம்மா போல்தான். உங்களை இங்கே வரச் சொல்லி எழுத வேண்டும் எனக் கௌரி சொன்னபோது எல்லாம் நான்தான் தடுத்தேன். காரணம் - உங்கள் பிள்ளை வீட்டில் உள்ள வசதிகளில் கால் பாகம் கூட எங்களால் செய்து தர முடியாது எனப் பயந்தோம். இன்றைக்கு எங்களுக்கு வார விடுமுறை. இல்லாவிட்டால் எங்களை நீங்கள் பார்த்திருக்க முடியாது. வீடு பூட்டியிருந்திருக்கும்.''

''ஆமாம், அம்மா... உன் பேத்தி தினமும் பள்ளிக் கூடத்திலிருந்து வரும் போது நானும் இருப்பதில்லை. இவரும் இருப்பதில்லை. குழந்தை எத்தனை ஏங்கிப் போகிறாள், தெரியுமா! நீ வந்தது நாங்கள் செய்த புண்ணியம் என நினைக்கிறோம்!'' எனச் சொன்னாள் கௌரி.

மாலையில் கௌரியின் பெண் அஞ்சனா வந்தாள். தன் பேத்தியைக் கட்டி அணைத்து உச்சி மோந்தாள் பாகிரதி. ஒரு நாளைக்கு இவள் பெரிய டாக்டராகவோ இன்ஜினீயராகவோ, போலீஸ் அதிகாரியாகவோ வரவேண்டும்.

நிச்சயம் வருவாள். தான் செய்யத் தவறியதைத் தன் பெண் நிச்சயம் நிறைவேற்றிக்காட்டுவாள்! பாகிரதியைப் போல் அவள் மனக்குருடு இல்லையே!

திரும்பிப் பார்க்கிறேன் – 3

# என் நிலையில் நீங்கள்

கிருஷ்ணமூர்த்தியின் முகச் சுளிப்புக்குச் சீக்கிரமே காரணம் தெரிந்து போயிற்று. அவருக்கு ''கிளைமாக்ஸ்'' பிடிக்கவில்லை.

''மாற்றி விடலாம்'' என்றார்.

இப்போது முகம் சுளித்தது நான்!

யூனிட் நண்பர்களும் இரு பிரிவாகப் பிரிந்து, என் பக்கம் சிலரும் கிருஷ்ணமூர்த்தி பக்கம் சிலரும் பேசினார்கள். விவாதம் காரசாரமாக இருந்தபோதிலும், முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம், இருதரப்பினரும் விட்டுக் கொடுக்கவும் தயாராக இருந்தோம் என்பதுதான்!



☛ ஜெமினி கணேசன் : நண்பரின் வருத்தம்

நான் சொன்னேன் : ''சில பிரின்டுகள் இந்த கிளைமாக்ஸுடன் இப்படியே போகட்டும். வேறு சில பிரின்டுகளில் கிளைமாக்ஸ் மாற்றி ரிலீஸ் செய்வோம்.''

இப்படி நான் விட்டுக் கொடுக்க, கிருஷ்ணமூர்த்தியோ இன்னும் ஒரு படி மேலே போய், ''அதெல்லாம் வேண்டாப்பா; உன் இஷ்டப்படியே விட்டு விடுகிறேன்'' என்றார்.

அவருடைய பெருந்தன்மையே எனக்கு இரவு தூக்கம் பிடிக்காமல் செய்து விட்டது. படம் வெற்றிபெற வேண்டுமே, என் கிளைமாக்ஸ் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமே!



☛ டி. ஆர். சுந்தரம் : அழைப்பே மாடர்னாக...

காஸினோ தியேட்டரில், பால்கனியில் நண்பர்களுடன் அமர்ந்து முதல் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். படத்திலேயே முக்கியமான, ஆழமான ஸென்டிமென்டுடன் கூடிய காட்சி. கதாநாயகி தன் கணவனிடம் கேவிக் கேவி வசனம் பேசுகிறாள் : ''அத்தான் (கேவல்)... நீங்கதான் (கேவல்).... என்னுடைய (கேவல்)...''

என்னது! தியேட்டர் ஸவுண்ட் பாக்ஸில் கோளாறா? அல்லது வாய்ஸ் ரிகார்டிங்கிலேயே கோளாறு ஏற்பட்டு விட்டதா? ஏகப்பட்ட கேவல் ஒலி கேட்கிறதே! விஷயம் புரிந்ததும் ஷாக் வாங்கியது போலிருந்தது எனக்கு!

படம் பார்க்கும் அத்தனை பேரும் கதாநாயகியுடன் சேர்ந்து கேவுகிறார்கள்' கேலியாக! ''ஹிக்! ஹிக்! ஹிக்!''

வார்த்தைக்கு வார்த்தை கேவல் ஒலி கொடுக்கச் சொன்னது டைரக்டரான என் தவறுதான். அதுதான் உள்ளத்தை நெகிழ்த்துவதற்குப் பதில் பரிகசிப்புக்கு உள்ளாகி விட்டது!

'இதை எப்படி நான் கவனிக்கத் தவறினேன்?' என்று என்னையே நொந்து கொண்டேன். அடுத்த கணம், ''படம் அடிவாங்கி விட்டது. அவ்வளவுதான். கிளம்புங்கள் போகலாம்'' என்று நண்பர்களிடம் காதோடு கூறி விட்டு, வெளியே வந்து விட்டேன்.

என் மனச் சோர்வை நான் மறைத்துக் கொள்ள முயன்றும் பயனில்லை. தியேட்டர் மானேஜர் புரிந்து கொண்டு விட்டார். ''பாதிப் படத்தில் போகாதீங்க ஸார் ;

## டைரக்டர் ஸ்ரீதர்



☛ டி. கே. சண்முகம்: மேதைத் தன்மை இதுதானோ!

# இருந்தால்...

கொஞ்ச நேரம் ஆபீஸ் ரூமில் இருங்க. படம் முடியும் போதுதான் சரியான ரியாக்ஷன் தெரிய வரும்'' என்றார். நான் வேண்டா வெறுப்பாகச் சம்மதித்தேன்.

சற்று நேரத்துக்கெல்லாம் என்னை வற்புறுத்தித் தங்கச் செய்த மானேஜர் வாயில் சாக்லேட் ஊட்டிக் கொண்டிருந்தேன்! ரசிகர்கள் அந்த ஒரு காட்சியைக் கிண்டல் செய்த போதிலும், படத்தை ஏற்றுக் கொண்டு விட்டார்கள் - கிளைமாக்ஸ் உள்பட - என்பது நிதர்சனமாகத் தெரிந்தது.

அப்போது கூட கல்யாணப் பரிசு அப்படி ஒரு அபார வெற்றி பெறப் போகிறது என்று நாங்கள் எண்ணவில்லை. ஆனால் அது சாதனை படைத்த படமாக விளங்கியது.

கல்யாணப் பரிசு மட்டுமல்ல ; என் விஷயத்தில் வாழ்க்கை என்பது வரிசையாக வெற்றிப் படிகளாகவே இருந்து வந்தது. 1953-ல் ரத்தபாசம் நாடகம் எழுதினேன். அதை எடுத்துக் கொண்டு டி. கே. சண்முகத்திடம் போனேன். அவர் வரவேற்பறையில் யாருடனோ பேசிக் கொண்டிருந்தார். வாசலில் நான் வந்து நிற்பதைப் பார்த்து ''யார் தம்பி? என்ன வேணும்?'' என்றார். நான் பேசவும் நா எழாமல் நோட்டுப் புத்தகத்தை நீட்டினேன். நண்பருடன் பேசியபடியே நோட்டுப் புத்தகத்தை அலட்சியமாக இப்படியும் அப்படியும் புரட்டினார். இங்கே இரண்டு வரி, அங்கே நாலு வரி படித்தார். பின்னர் கவனம் ஈர்க்கப்பட்டவராக விடுவிடுவென்று மூன்று நாலு பக்கங்களைப் படித்தார். என்னை ஏறிட்டுப் பார்த்து, ''நாடகம் நன்றாயிருக்கிறது. விவரமாப் பேசலாம்'' என்று நேரம், தேதி குறிப்பிட்டு வரச் சொல்லி விட்டார்.

நான் பிரமித்துப் போனேன்: ஒரு முழு நீள நாடகத்தை எவ்வளவு இலகுவாக எடை போட்டு விட்டார்! இது தான் மேதைத் தன்மை என்பதோ! டி. கே. எஸ். பிரதர்ஸ் தயாரிப்பில் நாடகம் மெருகேறி, அரங்கேறி அபார வெற்றி பெற்றது. இந்தப் பத்திரிகையின் நிறுவன ஆசிரியர் ''கல்கி'' ரா. கிருஷ்ணமூர்த்தி, ஒரு நாடகத்துக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார்; பாராட்டினார். அவரது திருக்கரத்தால் ஒரு மோதிரம் என் பேனா பிடித்த விரலில் ஏறியது!

''ரத்த பாசம்'' சினிமாவாகியது. அப்புறம் ''எதிர்பாராதது'' படப்பிடிப்பு. இரண்டுமே எதிர்பாராத அளவில் வெற்றி. இவற்றை அடுத்து, சுமார் ஒரு டஜன் படங்களுக்குக் கதை - வசனம் எழுதினேன். எல்லாமே வெற்றிதான். 56 - 57ல் தயாரிப்பாளர் ஆனேன். ''அமரதீபம்'' எடுத்தோம். மகத்தான வெற்றி. அடுத்த இரண்டு ஆண்டுகளுக்குள் இதோ, 'கல்யாணப் பரிசு' மூலம் டைரக்டராகவும் அங்கீகாரம் பெற்று விட்டேன்.

இது சுருக்கமான வெற்றிக் கதை. என்றாலும் ரத்தபாசம், எதிர்பாராதது ஆகிய இரண்டும் நன்றாக ஓடிய பிறகு, நான் அடுத்த வாய்ப்புக்காக நான்கு மாதங்கள் காத்திருக்க வேண்டியிருந்தது என்றால் உங்களுக்கு நம்புவது சிரமமாக இருக்கும். ஆனால் உண்மை அதுதான். அட்வான்ஸை வைத்துக் கொண்டு யாரும் கியூவில் நிற்கவில்லை!

சரியாக நாலு மாதங்களுக்குப் பிறகு சேலம் மாடர்ன் தியேட்டர்ஸாரிடமிருந்து அழைப்பு வந்தது. அவர்கள் அழைப்பு விடுத்ததே மாடர்னாகத்தான் இருந்தது! முதலில் ஒரு தந்தி. பிறகு அவர்களுடைய



சென்னைப் பிரதிநிதி ரயில் டிக்கெட்டுடன் வந்து விட்டார். ''சேலம் ஸ்டேஷனில் கார் வந்து அழைத்துப் போகும்'' என்றார்!

அதன்படியே எல்லாம் நடந்தது. எனக்கென்று ஓர் அறை. மேஜை, நாற்காலி, மின் விசிறி, வேளா வேளைக்கு டிபன், காப்பி, சாப்பாடு! வேலைதான் என்ன என்று புரியவில்லை!

மாலை ஆறு மணி சுமாருக்கு பாலு முதலியார் (டி. ஆர். சுந்தரத்தின் சகோதரர்) கூப்பிட்டு அனுப்பினார். ''ஒரு வங்காள நாவல் இருக்கு. அதை அடிப்படையாக வைத்து, சினிமாக் கதை - வசனம் எழுதணும். என்ன எதிர்பார்க்கறீங்க?'' என்றார்.

''நான் ரத்தபாசத்துக்கு நாலாயிரம் வாங்கினேன்; எதிர்பாராததற்கு ஐயாயிரம்; இப்போ ஆறாயிரம் எதிர்பார்க்கிறேன்'' என்றேன்.

''இரண்டாயிரம்தான். விருப்பமிருந்தா எழுதுங்க; இல்லாட்டி சென்னைக்கு டிக்கெட் வாங்கச் சொல்றேன்'' என்றார்.

எனக்கு சுருக்கென்றிருந்தது, அவர் இப்படி நறுக்கென்று பேசியது. ஆனாலும் சட்டென்று நான் பதில் கூறி விடவில்லை. ''கொஞ்சம் யோசிக்கிறேன் ; அவகாசம் கொடுங்க'' என்று கேட்டுக் கொண்டு அறைக்குத் திரும்பினேன்.

யோசித்தேன் : ''இது தன்மானப் பிரச்னையா?''

எனக்கு நண்பர் ஜெமினி கணேசனோடு நாராயணன் அண்டு கம்பெனிக்குப் போன நிகழ்ச்சி நினைவு வந்தது. ஜெமினி சொன்னார் : ''நாராயணன் கம்பெனி போன்ற நிறுவனத்தில் நீங்கள் வேலை செய்வது நல்லது. அங்கே பட்டண்ணா தான் எல்லாம். அவரை அறிமுகம் செய்து வைக்கிறேன்.''

அவ்வாறே அழைத்துப் போக, அறிமுகம் முடிந்ததும் பட்டண்ணா சொன்னார்: ''கதை - வசனம் எழுத ஒப்புக் கொண்டால் போதாது; எந்தக் காட்சியிலாவது காரணம் காட்டி நாங்க வசனத்தை மாற்றணும்னு சொன்னா மாற்றித் தரணும்.''

அது நியாயமான கோரிக்கை என்பதால் ''சரி'' என்று தலையாட்டினேன்.

அடுத்ததாக, ''நீங்க தினம் ஆபீஸுக்கு வரணும்'' என்றார் பட்டண்ணா.

உடனே நான், ''ஸாரி ஸார், கதை வசனம் எழுதித் தரத்தான் வந்திருக்கேன். குமாஸ்தா உத்யோகம் பார்க்க அல்ல. நடு இரவில் எழுதுவேன். பகலில் தூங்குவேன். சொல்ல முடியாது. குறிப்பிட்ட ஆபீஸ் நேரம் என்பது எனக்குச் சரிப்பட்டு வராது'' என்றேன்.

பட்டண்ணா பட்டுக் கத்தரித்தாற் போல் என்னை வெட்டி விட்டார். நான் ஒரு அருமையான வாய்ப்பைக் கை நழுவ விட்டு விட்டதாக ஜெமினி கணேசனுக்கு என் மீது வருத்தம்.

அந்தச் சம்பவம் இப்போது எனக்கு நினைவு வந்தது. அன்று குறிப்பிட்ட நேரத்துக்கு ஆபீஸ் வரச் சொல்லி என்னை - என் கிரியேடிவிடியை, சிருஷ்டித் திறனை - சிறைப்படுத்தப் பார்த்தார்கள். அது தன்மானப் பிரச்னை. இப்போது மாடர்ன் தியேட்டர்ஸில் பணம், நான் எதிர்பார்த்ததற்கு மிகவும் குறைவாகத் தருகிறேன் என்கிறார்கள். ஏற்பதா? வேண்டாமா? இதுவும் தன்மானப் பிரச்னைதானே?

என் நிலையில் நீங்கள் இருந்தால் என்ன முடிவு எடுப்பீர்கள்? யோசியுங்கள். அடுத்த வாரம் ஒப்பு நோக்குவோம்!

---

## கம்யூனிச ஜோக்ஸ்!



சோவியத் யூனியனே கம்யூனிசத்துக்கு முழுக்குப் போட்டு விட்ட இந் நாளில் இதோ சில கம்யூனிச ஜோக்குகள்.

1. ஒரு ரஷ்யரும் ஓர் அமெரிக்கரும் சந்தித்த போது பேசிக் கொண்டது!

அமெரிக்கர் : ''எங்கள் நாட்டில் முழு பேச்சு சுதந்திரம் உண்டு!''

ருஷ்யர் : ''எங்கள் நாட்டிலும் முழு பேச்சு சுதந்திரம் உண்டு, ஆனால் பேசிய பிறகு சுதந்திரம் இருக்காது!''

2. கம்யூனிச அரசு ஒன்று 'நம் அரசாங்கத்தின் குறை என்ன?' என்பது பற்றி ஒரு போட்டி நடத்தியது! போட்டியில் 'முதல் பரிசு' பெற்றவருக்குக் கிடைத்தது : 10 வருஷம்!

3. ஒரு கம்யூனிச நாட்டில் தேர்தல் அலுவலகத்தில் திருட்டுப் போய் விட்டது ஒரு நாள். உடனே போலீஸ் விரைந்து வந்து, ''காணாமல் போனவை என்னென்ன?'' என்று கேட்டது.

கிடைத்த பதில் : ''அடுத்த வருஷம் நடக்கப் போகும் தேர்தலின் முடிவுகள்!''

4. ஒருவன் : ''நான் இந்த அரசை வெறுக்கிறேன்!''

மற்றவன் : ''காரணம்?''

அவன் : ''நான் இந்த நாட்டை நேசிக்கிறேன்!''

- அ. சம்பத்குமாரி

# வட்டமேஜை

◆ தி. மு. க. அரசால் தடை செய்யப்பட்டிருந்த 'சந்தேக கேஸ்' சட்டம் மீண்டும் புத்துயிர் பெற்றிருப்பது, அன்றாடங்காய்ச்சி ஏழைகளுக்குப் பெரும் அவதி. சந்தேகம் என்ற பெயரில் இரவு வரை வேலை பார்த்து வரும் கை வண்டிக்காரர்களும், இரவுக் காட்சி படம் பார்த்து விட்டுத் திரும்பும் அப்பாவி பிரஜைகளும் உள்ளே தள்ளப்படுகிறார்கள். (சினிமா டிக்கெட்டைக் காட்டினாலும் விடுவதில்லை. எங்கே பொறுக்கினாய்? என்று கேள்வி வேறு!) சரி போகட்டும், இதனால் குற்றவாளிகள் எவரேனும் பிடிபட்டார்களா என்றால்.. பலன் 'பூஜ்யம்'தான்!

மதுரை - 1, கே. வேல்சாமி.

◆ சமீபத்தில் கோவை விவசாயக் கல்லூரியில் கலை விழாவின் போது, மாணவர்களுக்குள் அற்ப காரணத்துக்காகத் தகராறு ஏற்பட்டு, சைக்கிள் செயின்கள், சோடா பாட்டில்கள் உள்பட பிரயோகிக்கப்பட்டு, கடுமையான செக்ஷன்களின் கீழ் 25 மாணவர்கள் கைது செய்யப்பட்டுள்ளதாகச் செய்தி வெளியாயிற்று. கடும் போட்டியில் அரும்பாடுபட்டு அவர்களைச் சேர்த்த பெற்றோர்களின் மனம் என்ன பாடுபடும்? சமீப காலமாக பெரும்பாலான கல்லூரிக் கலை நிகழ்ச்சிகள் இவ்வாறே முடிகின்றன. மாணவர் சங்கத் தலைவர் தேர்தல்களின் போதும் ஆயிரக்கணக்கில் பணம் வாரி இறைக்கப்பட்டு, ரௌடிகளின் துணையோடு அரசியல்வாதிகள் நேரிடையாகத் தலையிடுகிறார்கள். தலைமையேற்கும் திறன், ஜனநாயகச் செயல்பாடு, லலித கலைகளில் ஆர்வம் போன்ற உயர்ந்த குறிக்கோள்களுடன் நடைபெறும் இந் நிகழ்ச்சிகள் சமுதாயத்தின் மிக நாசகரமான வழிமுறைகளில் பயிற்சி அளிப்பதில் அல்லவா போய் முடிகின்றன? மாற்று வழிமுறைகளைப் பரிசீலித்து வருவதாகக் கல்வி அமைச்சர் கூறியுள்ளது ஆறுதலளிக்கிறது.

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

◆ இன்றைக்குத் தி. மு. க. மீண்டும் 'பழைய குருடி கதவைத் திறடி' கதையாக ஜாதியைப் பற்றி உரத்துப் பேச ஆரம்பித்திருக்கிறது. தோல்வியுறும் போது ஜாதியைப் பற்றிப் பேசுவதும் பிற சமயத்தில் பேசாதிருப்பதும் அவர்களுடைய வரலாறு. தலைவரே 'நமக்கு 'நூல்' என்றாலே பிடிக்காது... எந்த நூல் என்பது உங்களுக்கே தெரியும்' என்று சொல்ல, கூட்டத்தினர் 'பூணூல்' என்று சொல்வதைக் கேட்டு மகிழ்கிறார். இதெல்லாம் தேவையில்லாதது. மக்களைப் பிரிக்கச் செய்யும் சூழ்ச்சியாகும். தமிழக மக்கள் இதை உணர்ந்து கொண்டு விட்டார்கள். தி.மு.க. தலைவர்கள் அரசியலை அரசியலாகப் பார்க்கா விட்டால் மக்கள் தி. மு. க. வை முற்றிலும் புறக்கணித்து விடுவார்கள்.

வேலூர், தமிழ்க்கண்ணன்.

◆ அண்ணா மேம்பாலத்தில் கடத்தல் சாராய அழிப்புச் செய்தியைக் கண்ட எவரும் அருவருப்பு அடைந்திருப்பர். சுற்றுப்புறச் சூழலின் தூய்மையை நாடும் அனைவருமே வேதனைப்பட்டிருப்பர். ஒரு மோசமான கண்ணோட்டத்திற்கு ஆளாகியது காவல் துறை. சாராய பாக்கெட்டுக்ளை அழிப்பதற்குப் போலீஸாருக்கு வேறு மார்க்கமே புலப்படவில்லையா என்ன? சே.... வெட்கக்கேடு...!

திருப்பதி, ஏ. என். டேவிட்.



## விடுபட்ட மீசை!

◆ அரசு ஊழியர்கள் வேலையில் இருக்கும் போது இறந்தால் ரூ 40,000/- அளித்து வந்தது. இதற்காக ஊழியர்களிடமிருந்து ரூ 5/- வசூல் செய்து வந்தார்கள். தற்சமயம் அ. தி. மு. க. அரசு, இந்தத் தொகையை ரூ 60,000/- ஆக உயர்த்தியதாக அரசு விளம்பரங்கள் வெளிவருகிறது. அதே சமயத்தில் தற்சமயம் ரூ 10/- வசூல் (மாதா மாதம்) செய்கிறார்கள். இந்த அரசு இரண்டு மடங்கு வசூல் செய்து, 40,000/- ரூபாயிலிருந்து 60,000/- ரூபாய்தான் அளிக்கிறது. இது ஊழியர்களுக்கு ஏமாற்றம்தான்.

கோவை, கே. சுப்பிரமணியம்.

◆ ''விடுபட்ட மீசை'' என்ற தலைப்பில், ''6.10.91 கல்கி இதழில் ஒரு படத்திற்கு மீசை இல்லாமல் அச்சாகி விட்டது. இந்த வாரம் தனியாக மீசை அச்சாகி உள்ளது. வாசகர்கள், அந்தப் படத்துடன் இந்த மீசையைப் பொருத்திக் கொள்ளவும்'' என்று செய்தி போடலாமே! (வாஷிங்டன் வைரம் - ஜெ. படம்)

செங்கோட்டை, மாஸ்டர்.

◆ தமிழர்கள் பெருவாரியாக வாழும் பகுதியில் ஒரு பூங்காவில் வள்ளுவர் சிலையை நிறுவ பெங்களூர் நகராண்மைக் கழகம் இசைவளித்தது. அதன்பேரில் பெங்களூர் தமிழ்ச் சங்கம் பொது மக்களிடமிருந்து நன்கொடை வசூலித்துச் சிலையை உருவாக்கியது. திருவள்ளுவர் சிலையை நிறுவுமாறு நாம் எந்தக் கன்னடியர்களையும் அணுகவில்லை. கன்னட அறிஞர்களின் சிலையை நிறுவ வேண்டியது அவர்களுடைய பொறுப்பாகும். சென்னையில் உள்ள கன்னட சங்கத்தினர் கன்னட அறிஞர்களுக்குச் சிலை நிறுவிட முன்வருவாராயின் எதிர்ப்பவர் எவர்? எனவே தராசு பதிலில் ''நாம் கன்னட அறிஞர்களின் சிலை வைத்தோமா?'' என்று கேட்பது பொருந்தாததாகிறது.

மேலும் பெங்களூர்த் தமிழ்ச் சங்கம் தமிழ் - கன்னட உறவிற்காகப் பாடுபட்டு வந்துள்ளது. கன்னட அறிஞர்களைச் சங்கம் பலவாறு போற்றியுள்ளது. கடந்த 27 ஆண்டுகளில் ஏறத்தாழ 30,000 பேருக்குச் சங்கம் கன்னட வகுப்பை நடத்தி இருக்கிறது.

பெங்களூர், க. சுப்பிரமணியன்.

(பெங்களூர் தமிழ்ச் சங்கத்தைத் தராசு குறை கூறவும் இல்லை; கன்னடியரின் போக்கு சரி என்றும் சொல்லவில்லை. தவறு என்றுதான் கூறப்பட்டிருக்கிறது. இச் சமயம் கன்னட அறிஞர்களைத் தமிழகம் போற்றுவது வள்ளுவமாகும் என்பதையும் ஒருமைப்பாட்டுக்கு உதவும் என்பதையும் எடுத்துக் காட்டுவதே நோக்கம். - ஆர்.)



களையும் பங்கு மார்க்கெட்டில் விற்று விடலாம். உங்களிடம் டிபன்சர்களை வாங்கிக் கொள்கிறவருக்கு நிறுவனம் தொடர்ந்து வட்டி தரும்; கடனையும் திருப்பித் தரும் - உரிய வேளை வரும் போது.

பங்குகளை விற்கப் போனால் லாபம் கிடைக்கும். டிபன்சர்களில் லாபம் எதிர் பார்க்க முடியாது. ஓரளவு குறைத்துத்தான் கேட்பார்கள். ஆனால் ஓர் அவசரத்துக்கு

உங்கள் செல்வம்

# சூதாட்ட மனப்பான்மை வேண்டாம்!

**ப**ங்குகள் தவிர டிபன்சர்கள் எனப்படும் கடன் பத்திரங்களையும் பல நிறுவனங்கள் வழங்குகின்றன. இவை என்ன?

''இத்தனை ரூபாய் உங்களிடம் பெற்றுக் கொண்டேன் ; இத்தனை ஆண்டுகளில் திருப்பித் தருகிறேன் ; அதற்கு இன்ன விகிதத்தில் வட்டி தருகிறேன்'' என்று எழுதிக் கொடுப்பதுதான் டிபன்சர்கள்.

ஆனால் சாமான்ய கடன் பத்திரத்துக்கும் இதற்கும் ஒரு வித்தியாசம். என்னவெனில், பங்குகளைப் போலவே டிபன்சர் விற்க முடியும் என்பது வசதி. இரண்டாவது வசதி, செல்வ வரி (wealth tax) கட்டுவோருக்கு உண்டு. டிபன்சர்களின் மதிப்பைக் குறைத்துக் காட்டலாம்.

டிபன்சர்களில் ஸெக்யூர்ட் - அன் ஸெக்யூர்ட் (Secured - Unsecured) என்று இரு வகை உண்டு. ஸெக்யூர்ட் டிபென்சர்கள் எனில், அந்த நிறுவனம் விநியோகிக்கும் டிபன்சர் பத்திரங்களுக்கு நிகராகத் தனது நிறுவனத்தின் ஏதேனும் ஒரு சொத்தை அடமானமாக வைக்கும். ஏதாவது ஒரு நெருக்கடி ஏற்படுமேயானால் டிபன்சர் வாங்கியவர்களுக்கு அந்தச் சொத்து மீது முதலுரிமை உண்டு.



**டி**பன்சர்களில் மற்றொரு வகை கன்வர்டிபிள் (Convertible) டிபன்சர்கள். அதாவது, டிபன்சர்களில் ஒரு பகுதியையோ அல்லது முழுமையாகவோ சில ஆண்டுகளில் பங்குகளாக மாற்றிக் கொடுப்பார்கள். இவ்வாறு செய்யும் போது பங்குகளின் மதிப்புக்கு ஏற்பக் கூடுதல் விலைக்கு அவற்றைப் பெற வேண்டியிருக்கும். பத்து ரூபாய் பங்கைப் பதினைந்து அல்லது இருபது ரூபாய் பெறுமானமுள்ளதாகக் கருதி, அதற்கேற்ற அளவில் டிபன்சர்களைப் பங்குகளாக மாற்றிக் கொடுப்பார்கள். இருந்தாலும் கூட அதே பங்குகளின் மார்க்கெட் மதிப்பு, இன்னும் அதிகமாதலால் பங்குகளைப் பெறும் டிபன்சர்தாரர்கள் திருப்தியே அடைகின்றனர்.

**ஷே**ர் அல்லது டிபன்சர்கள் விநியோகத்தில் பிரதான மார்க்கெட் என்றும் துணை மார்க்கெட் என்றும் உண்டு. ஒரு நிறுவனம் புதிதாக ஆரம்பிக்கப்படும் போது, அல்லது விரிவாக்கம் கருதி பங்குகளை மக்களுக்கு விநியோகித்து மூலதனம் திரட்டுவது பிரதான மார்க்கெட். இதில் நல்ல நிறுவனங்களைத் தேர்ந்தெடுத்து முதலீடு செய்வதில் அதிகமான 'ரிஸ்க்' அல்லது ஆபத்து இல்லை.

இவ்வாறு பெறப்பட்ட பங்குகள் மீண்டும் கைமாறுவது என்பதுதான் துணை மார்க்கெட். அதாவது, ஏற்கெனவே நம்மிடம் உள்ள பங்குகளை விற்று விடுவது, அல்லது, வேறு ஒருவர் ஏற்கெனவே வைத்துள்ள பங்குகளை நாம் வாங்குவது. இந்தத் துணை மார்க்கெட்டில் புகுந்து விளையாடுவோர் பலர் உண்டு. இதில் ஓரளவு 'ரிஸ்க்' இருக்கவும் செய்கிறது. ஒரு நிறுவனத்தின் செயல்பாட்டையொட்டி அதன் பங்குகளின் மதிப்பு உயரவும் தாழவும் செய்யும். இன்று வாங்கி நாளை விற்பதில் நஷ்டமும் வரலாம்; லாபமும் கிடைக்கலாம். நாளை விலை உயரும் என்று எதிர்பார்த்து இன்று வாங்குவதும், நாளை விலை குறையலாம் என்று கணிப்புச் செய்து இன்று விற்பதும் ஏராளமாக நடக்கிறது என்றாலும், இதில் ஓரளவு சூதாட்ட மனப்பான்மையும் சிலருக்கு உண்டு. இது ஆபத்தானது. ஒரு நிறுவனத்தின் செயல்பாட்டை ஆராய்ந்து, பங்கு விலை ஏறுமா, இறங்குமா என்று புரிந்து கொள்வது சிலருக்கு மட்டுமே கை வந்த கலை. விஷயம் தெரியாதவர்கள் இதைத் தவிர்ப்பதே நல்லது.

- வி. கோபாலன்



''பியூனிடம் கோபப்பட்டது தப்பாப் போச்சு.''

''ஏன் என்ன ஆச்சு?''

''அவர் ரொம்ப நல்லவர். அன்பளிப்பெல்லாம் வாங்க மாட்டார்னு வர்றவங்க கிட்டேல்லாம் சொல்லிக்கிட்டிருக்கான்!''

- சங்கமங்கலம் க. கோகிலவாணி.



கான்ஸ்டபிள் (இன்ஸ்பெக்டரிடம்) : ''நாலு நாள் லீவ் தர்றீங்களா... இல்லே இந்த ஊரில் கள்ளச்சாராயம் காய்ச்சறதா சர்க்காருக்குப் பெட்டிஷன் எழுதிப் போட்டு உங்களை சஸ்பெண்ட் செய்ய வைக்கவா?''

- உ. ராஜாஜி.



''ஜோதி கொண்டு போற தொண்டர் பின்னாடி தீயணைப்பு வண்டியும் போகுதே.. ஏன்?''

''ஜோதி கொண்டு போற வழியில்தான் எதிர்க்கட்சித் தலைவரோட வீடு இருக்குதாம்!''

- ஞா. ஞானமுத்து.



கருவில் இருக்கும் குழந்தையைக் காணும் ஸ்கேன் முறை....

# வியக்க வைக்கும் விஞ்ஞானப் படங்கள்

கருவின் வளர்ச்சியை, அதன் படிப்படியான முன்னேற்றத்தைக் காண முடியுமா? கம்ப்யூட்டர் துணையுடன் அதனை அலசி ஆராய்ந்து விவரிக்க முடியுமா? இந்தச் சாதனையை நிகழ்த்தியிருக்கிறார்கள் பிரான்ஸ், ஜப்பான், அமெரிக்கா நாட்டு உயிர் நூல் அறிஞர்கள். மூளையின் வளர்ச்சி, உடல் உறுப்புக்களின் தோற்றம் என்று படிப்படியாகப் பெறும் அபிவிருத்தியைத் தொடர்ந்து, நான்கு மாத வளர்ச்சியில் கருவின் கேட்கும் புலன்கள் உருவாகி விடுகின்றன. சுற்றுப்புற ஓசைகள், இசை, பேச்சுக்கள் எல்லாவற்றையுமே அது கேட்கத் தொடங்கி விடுகிறது.

தாயின் குரலைப் புரிந்து கொண்டு விட்ட பிறகு, அதனைக் கேட்கும்போதெல்லாம் எவ்வளவு மகிழ்ச்சியோடு கர்ப்பப் பையினுள் அந்தச் சிசு துள்ளுகிறது! இந் நிகழ்ச்சிகள் அனைத்தையும் நிதரிசனமாகக் காண்பிக்கும் படம் : 'வென் லைஃப் பிகின்ஸ்'.

கரு உருவானது முதல் சில வாரங்களில் படிப்படியான நிலைகளில் குழந்தையின் மூளை, வளர்ச்சி பெறத் தொடங்குகிறது. அதன் பெருக்கம், அமைப்புகள் நிறுவப் படுதல், நரம்பு செல்களுடன் இணைதல் எல்லாவற்றிலுமே எத்தனை வேகம்! கர்ப்பத்தின் மூன்றாவது வாரத்தில் தொடங்கிக் குழந்தையின் பதினாலாவது வயது வரை மூளை வளர்ந்து முழுமை பெறுவதைப் பார்க்க உதவுபவை ஸ்கேனர், அல்ட்ரா சவுண்ட், நியூக்ளியர் மாக்னெடிக் ரெஸனான்ஸ் ஆகிய விஞ்ஞானத் தொழில் நுட்பங்கள். படம்: 'பர்த் ஆஃப் தி பிரெய்ன்'.

'யூடெல்ஸாட்' என்றொரு அமைப்பு. ஐரோப்பாவில் துணைக் கோளின் மூலம் தொலைத் தொடர்புத் துறையில் அபிவிருத்தி பெறுவதில் முக்கிய பங்கைப் பெற்றுள்ள அமைப்பு. தொலை பேசி, தொலைக் காட்சி தவிர, வங்கிகள் - பத்திரிகை நிறுவனங்கள் - கம்ப்யூட்டர் பணிகள் போன்ற பல்வேறு தொழில்கள்

தொடர்பான செய்திப் போக்குவரத்துக்கும் ஒரு பாலமாக அமைந்துள்ள 'யூரோப்பியன் டெலிவிஷன் சாடிலைட்.'

இருபத்தாறு நாடுகள் இந்த அமைப் பின் மூலம் இணைந்திருக்கின்றன. எந்த வொரு நாட்டின் தொலைக்காட்சி நிகழ்ச்சி யையும் மற்றொரு நாட்டில் காண முடி கிறது. ஒரே நேரத்தில், இதில் அங்கம் வகிக் கும் அத்தனை நாடுகளிலும் ஒரே நிகழ்ச்சி யைக் கண்டு ரசிக்க முடிகிறது. பொழுது போக்கு என்று மட்டுமில்லை. பத்திரிகைத் துறையை எடுத்துக் கொண்டால், பாரிஸ் நகரில் உருவாக்கப்படும் 'ஹெரால்ட் டிரிப் யூன்' பத்திரிகையின் பக்கங்களை, இந்த அமைப்பின் மூலம் தி ஹேக், பிரஸ்ஸல்ஸ், லண்டன், பாரிஸ், ரோம் என்று பல்வேறு நாடுகளில் அமைந்துள்ள நகரங்களில் ஒரே நேரத்தில் அச்சிட முடிகிறது.

வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்கள் தொழில் சம்பந்தமாகத் தொலைபேசியில் பேச்சு நடத்தும் போது ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து அவரவர் உள்ளுணர்வை எடைபோட முடிகிறது. இந்தச் சாதனைகளை விவரிக்கும் படம் - 'யூடெல்ஸாட்.'

அண்மைக் காலத்தில் உலக மக்களைப் பீதிக்குள் ஆழ்த்தியுள்ள நோய் எயிட்ஸ். இப்போது விஞ்ஞானத் துறையின் கவனம் முழுவதும் அதனை வெற்றி கொள்ளும் முயற்சிகளில்தான். எயிட்ஸைப் பரப்பும் நோய்க் கிருமியின் படத்தை முதல் முறையாக ஆப்டிகல் மற்றும் எலெக்ட் ரானிக் மைக்ரோஸ்கோப்பின் துணையுடன் படம் பிடிக்க முடிந்திருக்கிறது. ரத்தத்தில் உள்ள வெள்ளை அணுக்களின் கட்ட மைப்பு, அவற்றின் பணி, எயிட்ஸ் நோய்க் கிருமி அதனுடன் கலக்கும் முறை, அதைத் தொடர்ந்து வெள்ளை அணுக்கள் அழிவுக் குள்ளாவது போன்ற நிகழ்ச்சிகளை விவரிக்க மேலே கூறிய மைக்ரோஸ்கோப் தவிர துணை நிற்பவை : கம்ப்யூட்டர் துணையுடன் உருவாக்கப்படும் படங்கள்.

'எயிட்ஸ் - தி வைரஸ்' என்னும் இப் படம் மருத்துவத் துறை நடத்தி வரும் இந் நோய்க்கெதிரான ஆராய்ச்சிகளையும் விவ ரிக்கிறது.

துணைக்கோளின் உதவியுடன் பூமி யைப் படம் பிடிக்க முடிகிறது. அந்தப் படங்கள் உதவிடும் துறைகள் : மண்ணியல் ஆய்வுகள், செடி கொடிகள் வளர்ச்சி, அவற் றைப் பாதிக்கும் பூச்சிகள், ஆறுகள்ஓடும் பாதைகளில் ஏற்படும் மாற்றங்கள், சுற்றுப் புறச் சூழலைப் பாதிக்கும் மாசுகள்.... சுருக்கமாக நமது கண்ணுக்குப் புலனாகாத பல விவரங்களைக் காண உதவுகிறது இந்தத் தொலை உணர்வு துணைக்கோள். படத்தின் பெயர் : 'ஸ்பாட்'.

அண்மையில் பிரெஞ்சுத் தூதுவரகக் கலாசார - விஞ்ஞானப் பிரிவும் பிலிம் சொஸைட்டிக் கூட்டமைப்பும் இணைந்து சென்னையில் ஒரு திரைப்பட விழாவை நடத்தியது. அதில் காட்டப்பட்டவைதான் மேற்கூறிய படங்கள்.

ஒவ்வொன்றுமே பத்து முதல் இருபது நிமிடங்கள்தான். அந்தக் குறுகிய நேரத் துக்குள் அவை சொல்லும் செய்திகள்



ஏராளம். ஒவ்வொரு குறிப்பிட்ட துறை யிலும் மனிதன் படைத்துள்ள சாதனைகள் வியக்க வைக்கின்றன. ஹைதராபாத்தில் நடைபெறும் கிரிக்கெட் பந்தயத்தை இங்கே நாம் சென்னையில் இன்னமும் தடங்கலுக்கு வருந்திப் பார்க்க முடியாமல் போகும் சூழ்நிலையில், இந்த விஞ்ஞான-தொழில் நுட்ப முன்னேற்றங்கள் பிரமிக்க வைக் கின்றன. பெருமூச்சு விடவும் செய்கின்றன.

- சி. ஆர். கே.

## நீங்கள் கேட்டவை - தராசு

● கே. ஆர். விஜயா, கோவை.

*? காமன் வெல்த் குழுவினர் தமிழக சட்ட சபை நடவடிக்கைகளைப் பாராட்டியிருக் கிறார்களே?*

! சே! ரகளை நடக்கும் சமயமாகப் பார்த்து வந்திருக்கக் கூடாதா? இன்னும் அதிகமான பாராட்டை நம் சட்டசபை பெற்றிருக் குமே!

● எம். பிரபு, குமராட்சி.

*? கேபிள் டீவி விசுவரூபம் எடுத்துள்ளதே, இது மாணவர்களின் படிப்பைப் பாதிக் காதா?*

! கேபிள் டீவி இல்லாவிட்டால் டீவி, டீவி இல்லாத போது சினிமா, சினிமா இல்லாத போது நாடகம்... படிப்பு பாதிக்கப்படுவ தாகப் படிக்கிறவர்கள் குறைப்படுவ தில்லை. அவர்கள் எந்தச் சூழ்நிலையிலும் படிப்பார்கள். படிக்காதவர்கள் கவனத்தை ஈர்க்க கேபிள் டீவிதான் வேண்டும் என்ப தில்லை. ஆக மொத்தத்தில் குறைப்படு கிறவர்கள் அதிகமாகப் பெற்றோர்களே!

● எம். செல்லையா, சாத்தூர்.

*? சின்னத் தம்பியின் இவ்வளவு பெரிய வெற்றிக்குக் காரணம் என்னவோ?*

! அறுபது வருஷ ரிகார்டை முறியடித்து விட்டதாமே! அடுத்து வந்த ஒரு படத்தில் அதே டீம் இருந்தும், இளையராஜா இல்லா மல் வெற்றி பெறவில்லை என்பதைக் காண, உங்களுக்கு விடை கிடைத்திருக் குமே!

● டி. எம். ஜானிபிரபு அஞ்சலி, குடியாத்தம்.

*? "ஜெயலலிதா பெரியார் வழியில் ஆட்சி நடத்துகிறார்" என்று சுலோசனா சம்பத் கூறி யிருக்கிறாரே?*

! பெரியார் வழி இருக்கட்டும்; பிழைக்கும் வழி தெரிந்திருக்கிறது, சுலோசனாவுக்கு.

● மனோபாரதி, பாண்டிச்சேரி.

*? இடஒதுக்கீடு விஷயத்தில் வெற்றி அடைந்திருப்பது வி. பி. சிங்கா? நரசிம்ம ராவா?*

! முன்பு காங்கிரஸ், சோஷலிஸத்தை ஏற்று, சோஷலிஸ்டு கட்சி - பிரஜா சோஷ லிஸ்டு கட்சி எல்லாவற்றையும் முழுங்கி ஏப்பம் விட்டு விட்டது போல், இப்போது மண்டல் அறிக்கையை ஏற்று, நரசிம்மம், சிம்மத்தை முழுங்கி விட்டது!

● ப. விஜயபாலன், சென்னை - 18.

*? நம்பர்-ஒன் ஸ்டண்ட் மாஸ்டர் யார்?*

புதுமை எல்லை?

# ஜெ: ஆன்மீகவாதியா? பகுத்தறிவாளரா? நடுநிலையாளரா?

! சினிமாவில் சூப்பர் சுப்பராயன். அர சியலில் சுப்பிரமணிய சுவாமி.

● எஸ். பாண்டியராஜ், காரைக்குடி.

*? நரசிம்மராவைச் சிரிக்க வைக்க யாரால் முடியும்?*

! மனமோகனச் சூழல் ஏற்பட்டால் சிரிப்பு தன்னால் வரும்!

● தா. சிந்துகுமார், காங்கரை.

*? நினைக்க நினைக்க உங்களுக்கு எரிச்சல் தருவது?*

! முதல்வர் வரப் போகும் பாதையை மணிக்கணக்காகப் பொது மக்களுக்கு அடைத்து விடும் கொடுமை. பாதுகாப்பு தேவைதான். அதற்கென்று பொது மக்களை இப்படி வதைக்க வேண்டுமா?

● எஸ். பீ. குயில்குமார், காரைக்குடி.

*? "என் ஆட்சியில் ஆடுகளை ஏமாற்றி ரத்தம்*



குடிக்கும் ஓநாய்களை விட மாட்டேன்'' என்கிறாரே, ஜெயலலிதா?

! அ. தி. மு. க. வில் ஒரு காளிமுத்து இல்லாத குறையை நீக்குகிறார்.

● பாதூர் காதர், சென்னை.

? திரை உலகுக்கும் நாடக உலகுக்கும் உள்ள வேறுபாடு?

! சில திரைப்படங்களைப் பார்க்கும் போது 'ஒரு வேறுபாடும் இல்லை' என்று தான் தோன்றுகிறது!

● அ. மா. பழனிசாமி, கோவை.

? அலெக்ஸாண்டர் மீண்டும் தமிழக ஆளுனரானால் கிடைக்கப் போகும் பயன் என்ன?

! தரமான ஆங்கிலத்தில் ஏராளச் சொற்பொழிவுகள்.

● எஸ். நாரம்புநாதன், சுரண்டை.

? ''சென்னை நகரில் இனி சினிமா போஸ்டர்கள் ஒட்டுவதில்லை'' என்று சினிமா தயாரிப்பாளர்கள் சங்கம் முடிவு செய்திருப்பது பற்றி...?

! தீர்மானம் நிறைவேறி, செயல் வடிவமும் பெற்றால் மாடுகளுக்கு ரொம்ப ஏமாற்றமாய் இருக்கும்.

● எஸ். மகேந்திரன், நீடாமங்கலம்.

? ஜெயலலிதாவின் அதிரடி நடவடிக்கையால் கள்ளச் சாராயம் முழுதும் ஒழிந்து விட்டதா?

! ஒழியாதது மட்டுமல்ல; உயிர்களையும் பலிவாங்கிக் கொண்டிருக்கிறது.

● பாபு, நெல்லிக்குப்பம்.

? ''சிறந்த முறையில் நடனம் ஆடும் கவர்ச்சி நடிகைகளுக்கு மத்திய மாநில அரசுகள் விருது கொடுக்க வேண்டும்'' என்று டிஸ்கோ சாந்தி கூறியுள்ளது பற்றி?

! இதிலென்ன புதுமை இருக்கிறது? ''சிறந்த முறையில் கவர்ச்சி அரசியல் நடத்தும் அரசியல்வாதிகளுக்குச் சினிமாவில் கவர்ச்சி நடனம் ஆடுவோர் சங்கம் விருது அளித்துக் கௌரவிக்கும்'' என்று அறிவித்திருக்கலாம்!

● இரா. மகாராஜன், ஆரல்வாய்மொழி.

? தமிழ்நாட்டில் மேல் சபை தேவை யில்லை என்ற தீர்மானத்தின் மீதான வாக்கெடுப்பில் காங்கிரஸ் நடந்து கொண்டது சரிதானா?

! முற்றிலும் சரி, பாராட்டுக்குரிய பேச்சுக்கள் ; செயல்பாடு.

● மு. க. தி. சு. பாலசுப்பிரமணியன், முசிறி.

? ''இட ஒதுக்கீட்டில் பொருளாதார அடிப்படையைப் புகுத்தக் கூடாது'' என கருணாநிதி எதிர்ப்புத் தெரிவித்துள்ளாரே?

! இட ஒதுக்கீட்டையே ஒதுக்கி விடும் காலம் இன்னும் வரவில்லையெனில், இட ஒதுக்கீட்டுடன் பொருளாதாரப் பின்னணியையும் இணைப்பதே நியாயமாய் இருக்கும். இவ் விஷயத்தில் கருணாநிதியின் எதிர்ப்பு வலுவற்றது.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம் □

? ஜெயலலிதா ஆன்மீகவாதியா? பகுத்தறிவாளரா? நடுநிலையாளரா?

! மூன்றும் இல்லை ; வெறும் அரசியல் வாதி. அதனால்தான் சங்கராச்சாரியாரிடம் ஆசி பெற்று, வீரமணிக்குப் பணமுடிப்புத் தந்து, கச்சத் தீவு - காவிரி பிரச்னைகளில் கருணாநிதியைத் துரோகி என்கிறார்.

□ரூ. 25 பரிசு பெறுபவர் :
எம். சம்பத்,
9, மாரியம்மன் கோயில் தெரு,
வேலாயுதம்பாளையம் - 639 117.
கரூர் வட்டம்.



☛ வெற்றியின் காரணம்



☛ வலுவற்ற வாதம்



☛ பிழைக்கும் வழி



☛ நடுநிலையாளரா?



☛ சிம்மத்தை முழுங்கினார்

# அன்புள்ள அலமு அக்காவுக்கு,



நீ டீ.வி.யில் ஒரு சான்ஸ் கேட்டு எழுது... கிடைத்தாலும் கிடைத்து விடும்... ஏனென்றால் உனக்கு 'double qualification.' மனைமாட்சியில் சமையல் குறிப்பும் சொல்லலாம்; 'நமப் பார்வதி பதையே நமஹ...' என்று ஆரம்பித்து பிரவசனமும் செய்யலாம்... - இந்த ஜோக்கை என் மாமாவிடம் சொல்; நிச்சயம் ரசிப்பார்!

Jokes apart, உன் கடிதம் எனக்கு உற்சாகத்தையே தந்தது. நவராத்திரி யைச் சந்தோஷமாகக் கொண்டாடினேன். 'கொள்ளு சுண்டல்' ஜோர். புதுப் புடைவை உண்டு - சந்தனக் கலரில் சைனா சில்க்...! போட்டோ எடுத்திருக்கிறது. அடுத்த முறை அனுப்புகிறேன்.

இன்னொரு ரொம்ப சுவாரஸ்யமான சமாசாரம்... எங்கள் பக்கத்துத் தெருவில் நிர்மலா குருசாமி என்று ஒருத்தி... உன் வயது இருக்கும். ஒரு பையன், ஒரு பெண் என்று இரண்டு குழந்தைகள் இருக்க, மூன்றாவது முறை பிள்ளை உண்டானாள். 'என்ன! இவங்களுக்குக் கு. க.விலெல்லாம் நம்பிக்கை கிடையாதோ...' என்று நான் உரக்க சிந்தித்த போது ஆனந்த் 'It is none of ynur business' என்று அடக்கி விட்டார். உனக்குத்தான் தெரியுமே... இவருக்கு யாரை விமர்சித்தாலும் பிடிக்காது.

அது கிடக்கட்டும். நான்கு மாதங்களுக்கு முன் நிர்மலாவுக்குப் பிரசவம் ஆயிற்று. பெண் குழந்தை. இப்ப - சமீபமாய் நாலைந்து நாட்களாக அவர்கள் வீட்டில் வழக்கமாய் மொட்டை மாடியில் காயும் குழந்தைத் துணிகளைக் காணோம். அந்தப் பக்கம் போகும் போது வழக்கமாய் வாசல் வழியே தெரியும் தூளியையும் காணும். எனக்கு என்னவோ உறுத்தல்... சபாவுக்கு வந்த நிர்மலாவின் 'நெய்பர்' ஞானத்திடம் மெள்ள விசாரித்தேன்.

அதிசயத்திலும் அதிசயம் அக்கா!.... அந்தக் குழந்தையை நிர்மலா பெற்றதே குழந்தை பாக்கியம் இல்லாத தன் மைத்துனன் - ஓரகத்திக்குத் தத்துக் கொடுக்கத் தானாம்! சட்டபூர்வமாக அப்படிச் செய்து விட்டார்களாம்!

"நம்ம சொஸைட்டியில் 'அடாப்ஷனை' எல்லாம் இந்த ஜன்மத்தில் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்" என்று நீ முன்பு ஒரு முறை சொன்னாயே... இப்போ, இதற்கு என்ன சொல்கிறாய். நிர்மலாவைப் போல் வேறு சில பெண்கள் செய்துள்ளதாகவும் ஞானம் சொன்னாள். அது மட்டுமல்ல... உறவல்லாத குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்வதும் இப்போது ரொம்ப சகஜமாகி விட்டதாம். 'Adoption Centre'களில் பெற்றோர் குழந்தை வேண்டிப் பதிவு செய்து கொண்டு தங்கள் முறைக்காக வருடக்கணக்கில் கூடக் காத்திருக்கிறார்களாம்!

எனக்கென்னவோ உறவல்லாத குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்வதுதான் நல்லது என்று தோன்றுகிறது. பிற்காலத்தில் பிரச்னைகள் வராமல் இருக்கும். ஆனாலும் நிர்மலா குருசாமியை அவள் துணிச்சலுக்காக மானசீகமாகப் பாராட்டுகிறேன். அதே சமயத்தில், நமக்குத் தனிப்பட்ட முறையில் இந்த 'adoption கவலைகளைத்' தராமல் காத்த கடவுளுக்கு நன்றி சொல்லணும்... இதை எழுதும்போதே மாலு தூக்கத்துக்கு அழுகிறது!!...

உ. பி.

- அம்பு

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.

# உங்கள் ஃபர்னிச்சரை பாலிஷ் செய்யும் நேரமா –

# அதை டச்வுட் செய்யுங்கள்.



ஃபர்னிச்சருக்கு பேசத் தெரியாது. அதனால் என்ன ? ஒரு முறை பார்த்தாலே, எதற்கு பாலிஷ் அவசியம் எதற்கு தேவையில்லை என்பது புரிந்துவிடும். மேலும் அழகான ஃபர்னிச்சர் உயிரற்றுக் கிடந்தால், அதன் மதிப்புதான் என்ன ? அதனால் அடுத்த முறை உங்கள் இல்லத்தை பெயிண்ட் செய்யும்போது ஃபர்னிச்சருக்கும் அவசியம் பாலிஷ் செய்யுங்கள் – டச்வுட் உபயோகித்து. டச்வுட் உபயோகிப்பது மிகவும் எளிதானது இதற்காக ஒரு பாலிஷ் செய்பவரை அழைக்கத் தேவையில்லை. உங்கள் பெயிண்டரே இதை பிரஷ்ஷினால் பூச முடியும்.

தெரியுமா ? டச்வுட் பூசப்பட்ட ஃபர்னிச்சர் பல வருடங்களுக்கு புதியதுபோல் பொலிவுடன் இருக்கும்! ஏனென்றால் டச்வுட்-ல் பாலியூரிதேன் உள்ளது. அது ஃபர்னிச்சரை வலுவடையச் செய்வதுடன், கறைகள், புள்ளிகள் மற்றும் கீறல்களிலிருந்து பாதுகாக்கிறது. அதனால் ஃபர்னிச்சர் மீது சூடான தேநீர் விழுந்தாலோ அல்லது ஃப்ளவர் வாஸ் உராய்ந்தாலோ, நீங்கள் கவலைப்பட வேண்டாம். டச்வுட் க்ளாஸி ஃபினிஷின் பளபளப்பு எங்கிருந்தாலும் அறிய முடியும். ஆனால் நீங்கள் பளபளக்கும் ஃபினிஷை விரும்பாவிட்டால் உபயோகியுங்கள் டச்வுட் மேட் ஃபினிஷ். இனி டச்வுட் உங்களுடையது. நீங்கள் விரும்பினால் மேட் மற்றும் க்ளாஸி ஃபினிஷ்களை கலந்து உங்களுக்கு பிடித்த அளவு பளபளப்பை ஃபர்னிச்சரில் உண்டாக்கலாம். அதனால் ஃபர்னிச்சரின் தேவையை உணர்ந்து இப்பொழுதே அதன் நன்மைக்காக கொண்டு வாருங்கள் டச்வுட்.






ஃபர்னிச்சருக்கு புத்துயிர் ஊட்டிடும், எழிலுடன்

தயவு செய்து, டச்வுட் இன் பல ஆண்டு காலம் நீடிக்கும் அழகினைப் பற்றிய இலவச சிறு புத்தகத்தை அனுப்பவும். K

பெயர் ______________________

______________________

முகவரி ______________________

______________________

______________________

டச்வுட் இன் முகவரி: **ஏஷியன் பெயிண்ட்ஸ்**
டச்வுட் பிரிவு, த.பெ. எண். 11701 பம்பாய்-400 021.



